# தனவணிகன்



திரைகடலோடியும்
திரவியந்தேடு

'DHANA VANIKAN'

KOTTAIYUR.

## ‘ தனவணிகன் ’



ஓர் உயர்த்ர மாதப் பத்திரிகை.

கோட்டையூரிலிருந்து ஒவ்வொரு தமிழ் மாதக் கடைசித் தேதியிலும், தமிழ் இலக்கிய சம்பந்தமாகவும், தன வணிக சமூக முன்னேற்ற சம்பந்தமாகவுமுள்ள அரிய கட்டுரைகளைத் தன்னகத்தே தாங்கி இந்தியாவில் செய்யப்பெற்ற பால்போன்ற கிளேஸ் கடிதத்தில் 64 பக்கங்களுடனும் சிறந்த ஆப்டோன் படங்களுடனும், சித்திரப் படங்களுடனும் கண் கவர் வனப்புடன் திகழும் உயரிய மாதப் பத்திரிகை ‘ தனவணிகன் ’ ஒன்றுதான்.

தனவணிகனுக்கு கட்டுரை தந்துதவ இசைந்துள்ள பெரியார்களிற் சிலர்.

---

டாக்டர். முத்துலட்சுமி ரெட்டி.
M. முருகப்ப செட்டியார் B. A., B. L.
V. சண்முகம் செட்டியார் B. A., B. L.
A. ரங்காச்சாரியார், B. A., B. L.
S. S. பாரதி, M. A., B. L.
சுவாமி, பரிபூர்ணனந்தஜி.
சாண்டோ, லெ. சோமசுந்தரம்.
எஸ். பழனியப்ப செட்டியார்.
எஸ். சீதாராமய்யர்.
A. M. S. ராகவன், B. A., .LT.
சுந்தரமய்யர், B. A., L. T.
ராம. சு. ராம. ராமசாமி செட்டியார்.
ஜே. எஸ். கண்ணப்பர்.
தேசிக விநாயகம் பிள்ளை.
புரிசை. எஸ். முருகேசன்.
ஆனந்தன்.
ரெவரண்ட். பாப்லி துரை, B. A.
பி. ஸ்ரீ ஆச்சாரியார்.
பண்டிதமணி, மு. கதிரேசஞ் செட்டியார்.
R. பாலகிருஷ்ண முதலியார், B. A., B. L.
K. லக்ஷ்மண சர்மா, B. A., B. L.
A. பாலசுந்திரம், B. A., L. T.
V. கிருஷ்ண ரெட்டியார், B. A., L. T.

பண்டிட், கோவிந்த மூப்பனர். முதலியவர்களும் மற்றும் பலரும்.

| | | |
|---|---|---|
| வருடச் சந்தா உள் நாடு | ... | ரூ 2—0—0. |
| வெளி நாடு ... | ... | ரூ 2—8—0. |

தனவணிகன் பப்ளிஷிங் கம்பெனி, (லிமிடெட்.,)

கோட்டையூர்.

# ' தனவணிகன்

## ஆசிரியர் கழகம்.

---

தலைவர்.

திரு. K. ராமநாதஞ் செட்டியார், *B. A., B. L.*
அட்வகேட், சென்னை.

அங்கத்தவர்கள்.

திரு. K. V. A. L. அழகப்ப செட்டியார், *B. A , Hons.*

திரு. V. R. M. செட்டியார், *B. A.,* செய்கோன்.

திரு. அரு. சோமசுந்திரம், காரைக்குடி.

திரு. ராம. ராமநாதன், கோட்டையூர்.

திரு. V. G. நாயர்.

நிர்வாக ஆசிரியர்.

திரு. கருப்பஞ் செட்டியார்.

# " தனவணிகன் "
## கோட்டையூர்.

பிரமோதூத வருடம் கார்த்திகை மாதம்.

உள்ளுரை.

பக்கம்.



படங்கள்.

# இன்னிசை வாழ்த்துக்கள்.



(திரு. தேசிகவிநாயகம் அவர்கள்.)

வெண்பா.

"நாடு முன்னேறும் நகரம் சிறப்படையும்
நீடு தமிழும் நிலைத் தோங்கும்—தேடரிய
செல்வத் 'தனவணிக'ச் சேவகனுக் கன்பார்ந்த
நல் வரவு சொல்வோம் நயந்து.

ஊக்கமும் பேரறிவும் ஒத்துழைக்கும் நற்குணமும்
ஆக்கமும் சேர அடைவீரே—நீக்கமறப்
புத்துயிரை யூட்டிப் புதுவாழ் வளிக்குமிப்
பத்திரிகை வாங்கிப் படித்து."

(புரிசை பிரசங்க ரஞ்சித எஸ். முருகேசன்.)

வெண்பா.

"கோட்டையூர் வாழ்வணிகக் கோமான்கள் பல்லோர்கள்
நாட்டமுல குக்குழைக்க நாடுவதால்—ஈட்டும்
கனவணிகம் நாலோங்கக் கைத்தொழிலோடே ரோங்கத்
தனவணிக னேங்கத் தழைத்து.

சீர்கருப்பஞ் செட்டிமுதல் சின்னன்பர் முன்னின்றார்
ஏர் அட்வகேட்ராம ரிசைவானார்—பார்மன்
இனமயல்கள் நீக்கி யிசைகலையுந் தேக்கித்
தனவணிகன் வாழ்கத் தழைத்து.

சாதியினல் கல்வியினல் தம்மதத்தால் தந்நிறத்தால்
நீதியினல் பேதங்கள் நில்லாமல்—போதியென
ஒட்டிச் சமத்துவத்தை யூட்டித் தனவணிகன்
நாட்டிற் சிறந்திடுக நன்று."



காலஞ்சென்ற ஆண்டிப்பட்டி ஜமீன்தார் திவான்பகதூர்
சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்கள்.

## ஸ்ரீகாசி விஸ்வநாதர் ஆலயம்.



ஸ்ரீ காசியில் ஸ்ரீ விஸ்வேஸ்வரர் சந்நிதி மூலஸ்தானம வெள்ளித் தொட்டியின் நடுவில் ஜோதி லிங்கமூர்த்தி புஷ்ப அலங்காரத்தோடு வீற்றிருக்கும் சேவை.

ஸ்ரீ காசி முதலிய வடநாட்டிலுள்ள பல புண்ணிய க்ஷேத்திரங்களின் சகல விபரங்களும் அழகிய சித்திரப்படங்களுடன் காசி அல்லது நமது புண்ணிய பூமி யென்ற நாமத்துடன் செந்தமிழில் ஓர் அருமையான புத்தகத்தைக் காசி, சில்க் ஹவுஸ், **K. S.** முத்தையா கம்பெனியார் வெளியிட்டிருக்கிறார்கள்.

விலை அணு **12**.



ஜி. சுப்பிரமணிய ஐயர்.

நம் தமிழ் நாடு நலம் பெற, அதனை நெடுந் துயிலினின்றும் விழிப்புறச் செய்தவரும், ராஜீய ஞானமும் தேசிய உணர்ச்சியும் நம் நாட்டினரிடையே பரவிப் பெருகுமாறு தம் கால மெல்லாம் ஓயாது உழைத்த வரும், தமிழ் மக்களுக்குப் பத்திரிகா ஞானம் என்னும் அமிர்தத்தை ஊட்டியவரும், இன்றும் எங்கும் பிரகாசமாய் ஜ்வலித்துக் கொண்டிருக்கின்ற "ஹிந்து" "**சுதேசமித்திரன்**" பத்திரிகைகளின் ஸ்தாபகரும், நம்மவரின் எதிர்கால மேம்பாட்டிற் கெல்லாம் மூலகாரணமாய் விளங்கிய வருமான மஹா புருஷர் இவரே யாவர்.

# தனவணிகன்

## கோட்டையூர்.

சமூக நலங்கருதி வெளிவரும்

ஓர் உயர்தர மாசிகை.

| மலர் 1. | பிரமோதூத ஆண்டு ஐப்பசித் திங்கள். | இதழ் 1. |
| --- | --- | --- |

## "நமது பத்திரிகை."



அன்பே உருவாய ஆண்டவன் திருவருளால் நம் தனவணிகன் இன்று தினம் புதிதாக பத்திரிகை உலகத்தில் தோன்றுகிறான். இது சமயம் நாம் முகவுரையாகச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறோம்.

நமது நாட்டில் பலபத்திரிகைகள் உள. எனினும் இன்னும் பல பத்திரிகைகள் தோன்றுதல் நமது நாட்டிற்கு நலமே. ஒரு நாட்டின் நாகரீகத்தையும் முன்னேற்றத்தையும் அந்நாட்டுப் பத்திரிகைகளின் நிலைமையைக் கொண்டு எளிதில் அறியலாம். ஒரு மொழி வளர்ச்சியையும், அம் மொழியில் நடந்துவரும் பத்திரிகைகளினால் தெரிந்து கொள்ளலாம். நம் நாட்டின் முன்னேற்றத்திற்கும் பத்திரிகைகள் பல அவசியமாகும். அவ்வாறாக சண்டு பத்

திரிகையின் பயனைப்பற்றியும், அதன் தேவையைப்பற்றியும் எடுத்துக் கூறுவதுமிகையாகும்.

நமது தனவணிகன் பொதுவாக நமது நாட்டிற்கும் சிறப்பாக தனவணிக சமூகத்திற்கும் பயன் தரும்பல துறைகளில் தொண்டியற்றுவான். அன்றியும், நமது நாட்டில் ஏற்படும் குழப்பங்களிலும், வீண் சண்டைகளிலும் தலையிடாது, பிறர் காய்தல் உவத்தலைப் பொருட்படுத்தி நடு நிலைமை வழுவாது நம் நாட்டிற்கும் சமூகத்திற்கும் இன்றியமையாதனவாகிய, கல்வி, தொழில், சமூக சீர்திருத்தம், சுகாதாரம், மொழிவளர்ச்சி முதலிய துறைகளில், உண்மைத் தொண்டாற்றுவதே தனவணிகனின் முக்கிய நோக்கமாகும்.

சமூக முன்னேற்றமும் தேச முன்னேற்றமும் ஒன்றிற்கொன்று முரண்பட்டதன்று. பல குடும்பங்களின் தொகுதி சமூகம் தேசம் பல சமூகங்களடங்கியது. சமூக வளர்ச்சி தேச முன்னேற்றமாவதால், சமூகத்தொண்டும் தேசத் தொண்டும் ஒன்றேயாகும்.

தேசபக்தியும் சமூகப் பற்றும் கொண்டுள்ள அன்பர்களனைவரும் தனவணிகன் வளர்ச்சிக்கு வேண்டுவன செய்து துணைபுரிந்து எம்மை ஊக்கப்படுத்துமாறு பன்முறையும் வேண்டுகின்றோம்.

---

# மாதர்ப் பகுதி.

(மாஜி சென்னை சட்டசபை உதவித் தலைவர் திருமதி டாக்டர் முத்து லெட்சுமி ரெட்டி அவர்கள்)

இச்சமயம் நம் தேசம் மிகக் கஷ்ட நிலைமையிலிருக்கிறது:— சகோதரிகளே! அநேக தேசபக்தர்கள் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்கள். நம் சிறுவர் சிறுமிகள் தேசத்திற்காக உயிரை விடத் தயாராக இருக்கிறார்கள். சிலர் உயிரையும் விட்டுவிட்டார்கள். ஆகையினால் ஸ்திரீகளாகிய நாம், நம் வீட்டு காரியத்தை மாத்திரம் சரிவர பார்த்துவிட்டு நாட்டு விஷயங்களைக் கவனியாமல் இருப்பது நியாயமாகுமா? நம் ஜனங்களின் அதிருப்திக்குக் காரணம் நம் தேசத்தின் ஏழ்மையும் நம் கல்விக் குறைவும், அதன் காரணமாக வியாதிகளும், ஜனங்களின் மரணத்தொகையும் அதிகமாய்விட்டது. ஜனங்களின் அறியாமையின் பொருட்டாக கொடிய பழக்க வழக்கங்கள் நம்மைவிட்டு அகலவில்லை. நம் தேசம் கூடிய சீக்கிரம் சுயராஜ்யம் அடைய வேண்டுமென்றால் எவ்விதத்திலும் நாம் எல்லோரும் ஒத்து வாழவேண்டும்.

ஜாதி வேற்றுமை தீண்டாமை நம்மைவிட்டு அகலும் வழியை ஸ்திரீகளாகிய நாமே தேடவேண்டும். ஏனென்றால் இதர தேசங்களுக்கு இந்திய மனிதர்கள் போனால் எப்படி இங்கு நம் சகோதரராகிய பஞ்சமர்களை நாம் நடத்துகிறோமோ அவ்விதமாக பிற தேசத்தார் நம்மை எவ்வளவு உயர் ஜாதியராயிருந்த போதிலும் நடத்துகிறார்கள். இந்திய கூலி என்றும் நம்மை ஏளனம் செய்கிறார்கள். நம் நாட்டிலே நமக்கு சுய ஆட்சி கிடையாததினால் நம்மை அடிமை நாட்டு ஜனங்கள் என்று நாம் எங்கே போனாலும் இகழ்கிறார்கள். இந்தியாவில் முப்பத்திரண்டு கோடி ஜனங்கள் இருந்தும் ஒற்றுமையில்லாததினால் அல்லவோ அவ்வளவு அவமானம் நமக்கு ஏற்பட்டிருக்கின்றது என்பதை நாம் உணரவேண்டும். ஆகையினாலே நம் நாடு சுய ஆள்கையை கைப்பற்றி மேன்பாடு அடைய வேண்டுமென்றால் ஜாதி வித்தியாசத்தையும் தீண்டாமையும் ஒழித்து நாம் எல்லோரும் இந்திய தாயின் மக்கள்கள் என்று சகோதரத்துவம் பாராட்டி வாழவேண்டும்.

இன்னொரு பெரிய காரியமும் ஸ்திரீகளாலேயே ஆகக்கூடியது. அது என்னவென்றால் நம் தேசத்தின் ஏழ்மைக்கு முக்கிய கார

ணம் பிரதேசத்து துணிகளையும் சாமான்களையும் வாங்குவதுதான் ஆகையினாலே இந்நிமிஷமே சுதேச சாமான்களையும் துணிகளையும் தான் வாங்கவேண்டுமென்ற ஒரு விரதத்தைக் கைக்கொள்ள வேண்டியது. இன்னும் ஸ்திரீகள் வீட்டுக்குள் இருந்தபடியே மகாத்மா காந்தி சொல்லுவதுபோல் சர்க்கா வைத்து நூல் நூற்கலாம். வீண் வாதம் பேசி பொழுது போக்காமல் நம் காலத்தை நம் ஏழை மக்கள் பயன்படும் வழியில் செலுத்துவோமாக!

**நாம் குடியை ஒழிக்க முயற்சி செய்ய வேண்டியது அவசியம்:** நம் தேசத்தில் குடியால் விளையும் தீங்கு பல உள. குடியன், வெறியன் என்ற பழமொழிப்படி ஒரு புருஷன் குடித்தால் அவன் மனைவியாளுக்கும் குழந்தைகளுக்கும் ஏற்படும் துன்பம் கணக்கற்றது.

இந்த மாகாணத்திற்கு குடியிலிருந்து ஆறுகோடி ரூபாய் வரி கிடைக்கிறதென்றால் எத்தனைக் கோடி ரூபாய் ஏழை ஜனங்கள் குடியில் செலவழிப்பாரென்பதை நீங்களே ஊகித்துக்கொள்ளலாம். அமெரிக்காவில் ஸ்திரீகளின் முயற்சியினாலே துரைத்தனத்தார் சட்டத்தால் குடியை பெரும்பாலும் ஒழித்துவிட்டனர். அதனால் அமெரிக்காதேசம் பல நன்மைகளை அடைந்துள்ளது. ஸ்திரீகள் கூட்டங்களில் ஜனங்களுக்கு குடியின் தீங்கைப்பற்றி சொல்வதுமல்லாமல் துரைத்தனத்தாரையும் குடியை போக்குவதற்கு சட்டம் செய்யும்படி மன்றாடி கேட்டுக்கொள்ளவேண்டும்.

**சகோதரிகளே:**—நமக்கு இக்காலத்தில் சில அரசியல் உரிமைகள் சுலபமாகக் கிடைத்திருக்கிறது. அதாவது நகர பரிபாலன சபைக்கும் சட்டசபைக்கும் பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்கும் உரிமையும் அச்சபைகளில் ஸ்தானம் வகிக்கும் மேலான பெருமையும் நாம் பெற்றிருக்கிறோம். மேல் நாட்டு மாதர்கள் அவ்வுரிமைகளுக்காக அந்நாட்டு ஆண்மக்களோடு போராடி, இனி வேறு வழியில்லை என்று அந்நாட்டு ஆண்மக்கள் அறிந்து பெருங் கசப்பு மனதுடன் அவ்வுரிமைகளை அப்பெண்களுக்கு அளித்திருக்கிறார்கள். ஆனால் நமக்கு அரசியல் உரிமைகள் கேட்ட அளவிலே நம் புருஷர்கள் வெகு சந்தோஷமாய் நமக்கு அளித்தார்கள். அத்தகைய உரிமையை நம் சகோதரிகள் தாங்கள் பயன்படுத்திக் கொள்ள வில்லை என்பது மிக்க விசனிக்க தக்கதே. தமிழ் நாட்டு பெண்மக்களின் கல்வி யின்மையே இதற்கு காரணமென்று சொல்லும்படியாக இருக்கிறது. ஆனால் கேரள நாட்டு மாதர்களில் அநேகர் உயர்தர கல்விபெற்றிருந்தும் தேச ஊழியத்திலும் சமூக சீர்திருத்தலிலும் ஈடுபடாதது என்னகாரணமோ?

அவர்களுக்கு இயற்கையாக உள்ள நாணத்தாலும் நெடு நாளாய் ஆண்களுக்கு அடிமைகளானதாலும் தங்கள் உரிமைகளை நிலை நிறுத்த போதிய தைரியம் இன்னம் ஏற்படவில்லை என்று சொல்லும்படியாக விருக்கிறது. ஆண்மக்களுடன் சமத்துவமாய் தேர்தலில் போட்டியாய் நிற்கும் நிலைமை தற்பொழுது நமக்கு உண்டு. ஆகையால் கல்வியும் அறிவும் அடைந்துள்ள சகோதரிகள் நம் சமூக நன்மைக்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் முன் வந்து பாடு படும்படி கோருகின்றேன்.

மேல் நாட்டு ஸ்திரீகள் இங்கிலாந்து, அமெரிக்கா மற்ற புது நாகரீகமடைந்த தேசத்து ஸ்திரீகள் கல்வியறிவில் தேர்ச்சியடைந்து பொது ஜன ஊழியத்தில் ஈடுபட்டு தன் நாட்டாருக்கு அநேக விதங்களால் நன்மை பயக்கி வருகிறார்கள்.

அவர்களால் அவர்கள் பிறந்த நாடு பயன்படுவது மட்டுமல்ல. கீழடைந்த நம்மைபோன்ற நாடுகளுக்கும் அவர்கள் ஏராளமாக வந்து குடியேறி, ஜாதி, மதம், வித்தியாசமில்லாமல் உழைத்து வருகிறார்கள். **டாக்டர் பேசண்டு, மிஸஸ் கஸின்ஸ், மிஸஸ் ஜீன ராஜதாஸா**, இன்னும் ஆயிரக்கணக்கான நம் தேசத்திற்கு நன்மை பயக்கும் பாதிரிமார்களும், அவர்கள் நாகரீகமும், அவர்களின் தேசத்தின் மேன்மையும் இவர்கள் நடவடிக்கைகளிலேயே நமக்குத் தெரியவருகிறது.

துருக்கி, எகிப்து தேசம் சீனதேசத்து ஸ்திரீகளும் தங்கள் முன்னேற்றத்திற்கும், தேசத்தின் சுயேச்சைக்கும் பாடுபட்டு வருகிறார்கள்.

அப்படியிருக்க பழைய நாகரீகமும் சிறப்பு முற்று கல்வி, கற்பு, வீரம், எல்லாகுணங்களிலும் எல்லா துறைகளிலும் புகழ் பெற்ற ஸ்திரீ ரத்னங்களாகிய, கார்கி, மைத்திரீயீ, லீலாவதி, அகல்யாபாய், கற்பிற் சிறந்த சாவித்திரி. கண்ணகி, மாதவி, கல்வி களஞ்சிய மாகிய மணிமேகலை,, மதனலீலையார், மங்கையர்கரசி, ஔவையார், இன்னம் எண்ணில் அடங்காத பெண்மணிகள் வழியில் வந்த நாம் எல்லாவிதத்திலும் கீழ்ப்பட்டிருப்பது நமக்கு வெட்கத்தை உண்டுபண்ணுகிறது. ஆகையினால் நாம் இனிமேலாவது பராமுகமாயிராமல் நம் நாடு நன்னாடாய் சுயாட்சியை அடையும் வழியை தேடுவோமாக.!

---

# புறமும் அதன் உவமைத் திறமும்.

## முன்னுரை.

(திருச்சி, தேசீயக்கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர்

எஸ். சீதாராமய்யர் அவர்கள்.)

எழுத்து சொல் பொருள் யாப்பு அணி யென்னும் ஐந்திலக்கணப் பகுதியையும் பெற்றுள்ள தமிழ் மொழி பொருளிலக்கணத்தான் பெரிதும் சிறந்து விளங்குவதாகும். இப்பொருளிலக்கணம் அகம் புறம் என இருவகைத்து. தமிழ் மக்கள் உறுதிப் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினுள், இன்பத்தை 'அகம்' என்றும், அறம் பொருள்களைப் 'புறம்' என்றும், இருவகைப்படுத்துக் கூறுவர்; வீடு சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலான், காரண காரியமுகத்தான் கூறப்படுதல் கூடுமன்றி, இலக்கணவகையான் கூறுதல் ஒண்ணாததுபற்றி, இதனை பிற புருஷார்த்தங்கள் கூறுமுகத்தான் இடையிடையே கலந்து கூறுவர். இன்பத்தை அகமென்றது, ஒத்த அன்பினரான தலைவனும் தலைவியும் தம்முட் கூறுகின்றகாலத்துப் பிறந்து அக்கூட்டத்தின் பின்பு, அவ்விருவராலும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே அனுபவிக்கப்படுவதாலாம். அறம் பொருள்பற்றி நிகழ்வனவற்றைப் புறமென்றதும் "மேற்கூறிய ஒத்த அன்புடையார் தாமேயன்றி, எல்லாராலும் அனுபவித்துணரப்பட்டு, இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதல்" கூடும் காரணம் பற்றியேயாம்.

இவ்வகம் புறம் என்ற இரண்டு பொருட் கூறுபாடுகளையும் தழுவி, இற்றைக்கு அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னர் நின்று நிலவிய பற்பல காலத்துப் பல பல நல்லிசைப் புலவர் ஒரு மக்களால் எண்ணிறந்த சீரிய கூரிய தீஞ்சொற் கவிகள் செய்யப்பெற்று விளங்கின.

அச் செய்யுள் மணிகளை, அக்காலத்துப் புலவருள் ஒருசிலர், ஒருமுறைமைப்படுத்தக் கருதி, தம்முட் குழுமி அடிவரையறையும், பொருள் நோக்கமும், செய்யுள் இலக்கணமும் கொண்டு, தனித்தனித்தொகை நூல்களாகப் பிரித்தமைக்கலாயினர்; அகப்

பொருள்பற்றிய செய்யுட்களில் நான்கடிமுதல் எட்டடி எல்லை வரையிலுமுள்ள அகவற்பாக்களைத் தொகுத்துக் 'குறுந்தொகை' எனப் பெயரிட்டனர்; ஒன்பதடிமுதல் பன்னிரண்டடிவரையிலு முள்ள 400 அகவற்பாக்களைச் சேர்த்து 'நற்றிணை' எனப் பெயர் நவின்றனர்; பதின்மூன்றடிக்கு விஞ்சிய அடிகளையுடைய அகவற் பாக்களை வேறாகக்கொண்டு 'அகநானூறு' எனப் பெயரிட்டனர்; மற்றும் சில அகவற்பாக்களைச்சேர்த்து அவை ஐந்து புலவர்களால் செய்யப்பட்டதுகொண்டு "ஐங்குறுநூறு" எனப் பெயரிட்டனர்; பரிபாடல் என்னும் ஒருவகைப்பா விசேடத்தால் எழுதப்பெற்ற எழுபது செய்யுட்களைப் 'பரிபாடல்' எனவும், கலிப்பா இலக் கணத்தால் செய்யப்பட்ட நூற்றைம்பது பாடல்களைக் 'கலித் தொகை' எனவும் உரைக்கலாயினர். இத்துணையும் அகத்திணைச் செய்யுட்பகுதி கூறியவாறு.

இனி, புறப்பொருள்பற்றிய 400 அகவற்பாக்களைத் தொகுத் துப் 'புறநானூறு' எனவும், பத்துப் புலவர்களாற் செய்யப்பெற்ற நூறு அகவற்பாக்களைத் தொகுத்துப் 'பதிற்றுப்பத்து' எனவும் பெயர் அமைத்தனர்.

இந்நூல்களை நோக்குங்கால், தமிழர் புறப்பொருள் பற்றி நூல்கள் செய்வதினும், அகப்பொருள் சார்பாகச் செய்யுள் செய் வதில் மிகவும் பற்றுடையவர் எனத் தெரிகின்றது. பிற்காலத் துப் புலவர்களும் அகப்பொருளைத் தழுவி 'கோவை, உலா, கலம் பகம், மடல், வண்ணம்' போன்ற நூல்களைப் பாடி மகிழ்வதால், இக்கொள்கை யின்னும் வலியுறுகின்றது. தண்டமிழ் காத்த தலை வர் எனப்படும் இரகுநாத சேதுபதியவர்கள் மீது அமிர்தகவி யென்ற ஆன்றோர் பாடிய 'ஒரு துறைக்கோவை' போன்ற நூல் களைக் காணின், புறப்பொருளினும் அகப்பொருள் பெரிதும் பண்டுதொட்டுப் புலவர்களால் கையாளப்பெற்றதென்பது நவில வும் வேண்டுமோ? நவீனத்திலும் தமிழ்ப்புலவர் பலரும் தஞ் சொல்லினும் பொருளினும் சிருங்காரமாகப் பொருளமைத்துச் சிலேடையாகப் பேசுவதும் இந்த சந்தர்ப்பத்தில் மறக்கற்பால தொன்றன்று.

இத்துணையும் யாம்பரக்கப் பகர்ந்தது கொண்டு, தமிழர் புறத் தைப் புறக்கணித்தார் என்று கருதத் தக்கதன்று. புறத்தைப் போற்றாப் புலவருமுளரோ? வடமொழிப் புலவராகிய வான்மீகி யாரும் தமிழர்க்குரிய இப்புறத்திணைப் பொருள்களைத் தம் நூலா கிய இராமாயணத்தில் பாராட்டிக்கூறியுள்ளார் என்றால், இதனது பெருமையை வேறு விதத்திலும் கூறவும் வேண்டுமோ? மேலும்

இது தமிழர்க்குச் சிறந்ததொரு வழக்காறுமாம். இப்புறத்திணையொழுக்கங்களுள் சிறக்கப் பாராட்டப்படும் போர்முறை தமிழ்நாட்டிலன்றி, நாளடைவில் பாதகண்டமுழுவதும் வியாபித்து நின்றதென்றால், இப்புறத்தின் புகழின்கீழ் அகத்தின்புகழும் அகப்படுமென்பதும் மிகையாமோ?

மேற்கூறிய இப்புறப்பொருள்பற்றிய நூல்களுள், "செப்புநர் எவர்க்கும் எய்ப்பிடைவைப்பாய் அரும்பெறல் மரபின் பெரும் பயன்தருமே" எனச் செவ்விதிற் புகழ்ந்து பாராட்டப்பெற்றது 'புறநானூறு' என்னும் நூலேயாம். அந்நூலினும் இங்கு நம்மாராய்ச்சிக்குப் பொருளாய்ப் போந்தது, "உவமையும் பொருளும் ஒத்தல்வேண்டும்" என்றும், "உவமப்பொருளை யுணருங்காலை" "உவமப்பொருளானே யுற்றதுணரச் செய்யல்வேண்டும்" என்றும், "உவமம்தனித்து அணிபெறக் கூறப்பட்டதன்று. பொருள்புலப்பாடுபற்றியே எழுந்தது" என்றும், "தார்க்கிகர்பொருள் நிச்சயம் செய்வதற்கு உவமையை ஒரு பிரமாணமாகக்கொண்டதுபோல" த்தொல்காப்பியர் பொருளை விளக்குதற்கே உவமையை ஒரு கருவியாகக்கொண்டனர்" என்றும், "உரனுடையுரவோர் உளங்கொள முதனூல், வரன்முறைபுணர்க்கும் மாண்பிற்றாகும்" என்றும், "உயர்ந்ததன் மேறேயுள்ளுங்காலை" யென்றும், ஆன்றோரால் புகழப்பெற்ற அரிய உவமையணியின் நயமேயாம்.

நிற்க, "புறமும் அதன் அணியழகும்" எனத்தலைப்புக்கொள்ளாது, "புறமும் அதன் உவமைத்திறமும்" எனத்தலைப்புக்கொண்டது எக்காரணம் கருதியெனின், அதனையும் இங்கு ஒரு சிறிது வகுத்துக்காட்டுதும்: தொல்காப்பியர் 'அணியியல்' என ஒரு இயல்வகுக்காது, 'உவமவியல்' என்ற ஒரு இயல் வகுத்ததின் கருத்தையுற்றுநோக்கின், "உவமையொன்றே அணியாவது; அணியென்று கூறப்பட்ட மற்றவையெல்லாம் அதனினின்றும் பிரிந்தவை" என்ற கொள்கைபெறப்படும். "நிரனிறுத்தமைத்த" என்ற முதற்குறிப்பையுடைய சூத்திரஉரையில், "இனி இவ்வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுள் சிலவற்றை ........... வாங்கிக்கொண்டு மற்றவை செய்யுட்கண்ணே அணியாமென இக்காலத்தாசிரியர் நூல்செய்தாருமுளர். அவை ஒரு தலையாகச் செய்யுட்கு அணியென்று இலக்கணம் கூறப்படா. என்னை? வல்லார் செய்யின் அணியாகியும், அல்லார் செய்யின் அணியன்றாகியும் வரும்" என்ற பேராசிரியரது கூற்றும் இக்கொள்கையைத் தழுவிநிற்கும். நச்சினார்க்கினியரும் உவமம் ஒன்றையே அணியாகக்கருதினர். சித்திரமீமாம்ஸை என்னும் கிரந்த கர்த்தாவாகிய அப்பையதீக்ஷிதர் அவர்களுக்கும் இக்கொள்கையுடன்பாடாம்.

"உவமையென்னும் தவலருங்கடத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப்புணைந்து
காப்பிய வரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவரிதயம்
நீப்பறமகிழ்ச்சி பூப்பநடிக்கும்மே"

என்பது அவ்வடமொழியாளர் கூற்றின் நேர்மொழி பெயர்ப்பாம்.

இவற்றை யெல்லாம் கொண்டே, பிற அணிகளும் உவமையணியுள் அடங்குவதாகக் கொள்ள 'உவமைத்திறம்' என உரைத்தாம்.

இனி அப்புறநானூற்றின் உவமைத்திறவாராய்ச்சி வருமாறு.

## கபிலரது உவமைத்திறம்.

இக்காலத்துக் 'கல்வியிற் பெரியன் கம்பன்' என யாவரும் கம்பரைப் புகழ்ந்து கூறுமாறுபோல, பண்டைக்காலத்து, நச்சினார்க்கினியர், சேனவரையர், பரிமேலழகர் முதலிய சிறந்த கல்வியறிவு சான்ற உரையாசிரியர்களெல்லாம் ஒருவரைப்போல் மற்றையோரும் யாதொரு கொள்கை மாறுபாடுமின்றி, ஆறும்வேற்றுமைச் செய்யுட் கிழமைக்கு உதாரணமாகப் பிறபொருள்கள் பலவும் சொல்லுதல் கூடுமாயினும், "கபிலரது பாட்டு, கபிலரது பாட்டு" எனச் சிறக்க உதாரணம் எடுத்துக் காட்டியுள்ளார். இவ்வொன்றே கபிலரது செய்யுட்டிறத்தை விளக்கிக் காட்டுவதற்குப் போதிய மேற்கோளாகும். மற்றும் இப்பெரியார், "நல்லிசைக் கபிலன்" என்றும், "விளங்கு புகழ்க்கபிலன்" என்றும், "பொய்யா நாவிற் கபிலன்" என்றும், "பரந்திசை நிற்கப்பாடினன்" என்றும் பிறதண்டமிழ்ப் புலவரால் பாராட்டப் பெற்றுள்ளார் எனில் இவர் பெரும் புலமையை யென்னென்று புகலுதும்?

இப் புலவர் பெரியார் பாடியனவாகப் புறநானூற்றில் காணப்படும் செய்யுட்கள் இருபத்தெட்டு. அவற்றுள் ஆங்காங்கு அமைந்துகிடக்கும் உவமை நயங்களை முன்னர் ஒருவாறு ஆராய்வாம்.

கடையெழு வள்ளல்களில் ஒருவனும், முல்லைக் கொடிக்குத் தேர் கொடுத்தோனும், தனது முன்னூறு ஊர்களையும் மற்றைப் பொருள்கள் யாவற்றையும் பரிசிலர்க்குக் கொடுத்து மகிழ்ந்தோனும், சைவ சமயாசாரியர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்திகளாலும் பொய்யாமொழிப் புலவராலும் முறையே "கொடுக்கிலாதா

ஊைப் பாரியே யெனக் கூறினும் கொடுப்பாரிலை" எனவும், " தரும் பாரி வாணன் தமிழ்த் தஞ்சையான்" எனவும் கொடைக்கோர் உரையணியாகவும் மிடிப்பகையாகவும், உயர்த்திப் புகழப்பெற்ற வனும், ஆகிய பாரியைப் பற்பல சமயங்களில் கபிலர் சொல்லினும் பொருளினும் இனிய செய்யுட்களால் பல படித்தாய்ப் பாராட்டிப் பாடியுள்ளார்.

அவற்றில் ஒன்று வருமாறு:—

பாரி பாரி யென்று பலவேத்தி
ஒருவர்ப் புகழ்வர் செந்நாப்புலவர்
பாரி யொருவனும் அல்லன்
மாரியுமுண்டு ஈண்டு உலகு புரப்பதுவே.
(புறம் 107)

(இதன் பொருள்) பாரி பாரி யென்று சொல்லி அவனுடைய பலதிறப்பட்ட புகழையும் வாழ்த்தி, அவ்வொருவனையே புகழ்வர் செம்மையான நாவையுடைய அறிவாளிகள். (பின்னர்) பாரியாகிய ஒருவனுமேயல்லன்; இவ்வுலகத்தைக் காத்தற்கு மாரி யென்ற ஒன்றும் உண்டு. என்பதாம்.

இதனால், இவ்வுலகத்தைக் காத்தற்கு மாரியொன்றுமிருக்க, என்னே! பாரியை மட்டும் புலவர் புகழா நிற்பது என்பது பெறப் பட்டபொருள்.

இங்கு நம்மாராய்ச்சிக்குப் பொருளாய்ப் போந்தது,

"பாரி யொருவனுமல்லன்
மாரியுமுண்டு ஈண்டுலகு புரப்பதுவே"

என்பது.

இதில் அமைந்துள்ள உவமை பாரியதுகைவண்மைக்கு மாரியது பெயல் என்பது. சொல்லப்புகின், இவ்வுவமை புதியதொன்றன்று. இதேநூலில் பிற இடங்களிலேயும் இவ்வுவமைபிறரால் கையாளப்பெற்றதற்கு சில உதாரணங்கள் தருதும். சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனை எருக்காட்டூர் தாயங்கண்ணனார் பாடுகின்றுழி, "மாரியன்ன வண்மையிற்சொரிந்து" என்று புகழ்ந்துள்ளார். "வரையாமரபின்மாரிபோல ......... கடாஅக்காற் பேகன் கொடைமடம் படுதலல்லது" என்று பேகனைப்பரணர் பாராட்டியுள்ளார். "கருவிவானம் தலை இயாங்கு, ஈத்தனின் புகழ் ஏத்தி" என்று குமணனைப் பெருஞ்சித்திரனார் கொண்டாடியுள்

ளார். "நீ தோன்றினையே ............... கருவியமழை பொழிந் தாங்கே" என்று சோழிய ஏனாதிதிருக்கண்ணனை மாறோக்கத்து நப்பசலையார் பாடியுள்ளார்.

இவைமட்டுமோ? வேறு நூல்களிலேயும் இவ்வுவமை பெரிதும் பயின்றுவருதற்கு ஒரு சிலசான்றுகள் காட்டுதும்.

"வானமுற நீண்டபுகழ் மாரி மழைவள்ளல்
தானமென வேண்டுநர்கள் வேண்டுவனநல்கி"

என்பது சீவகசிந்தாமணி காந்தருவதத்தை பாரியம்பகம். "காரார் புயற்கைக்கலிகன்றி" என்பது பெரிய திருமொழி.

ஒரே பொருள்படும் இத்துணை உவமைகளை இங்கு எடுத்துக் காட்டியது "மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே" என்னும் உவமையின் நயத்தை ஒப்பிட்டுப் பார்த்துப் பாராட்டுதற் பொருட்டேயன்றி, மேற்கோள் ஒன்றுபோல் பல யாம் எடுத்துக் காட்டும் வன்மையுடையேம் என்பதை அறிவுறுத்தும் நிமித்த மன்று. ஒரு திறத்த பொன்னைக் கொண்டு பல பொன் வினைஞர் அவரவர் தம் தம் அறிவிற்கும் ஆற்றலுக்கும் தக அரிய ஆபரணங் களை யியற்றுவிக்க, அவருள் துறைபோய கைவல் கம்மியனொரு வன் அனைவரும் புகழ்ந்து போற்றத்தக்க பிறர் எவரும் கண்டறி யாததொரு பொருளைச் செய்வித்து யாவரையும் மகிழ்விக்குமாறு போல, கவியின்பம் கனியக் கபிலரும் மாரியென்ற பலரும் கை யாண்ட உவமையையே புதியதொரு பொற்பளித்து பாரியோடு புணர்த்து இங்குப் புகன்றுள்ளார். மாரிபோலும்பாரியது கொடை யென்னாது, அதனை மாற்றி யாவரும் மகிழ "மாரியுமுண்டு" என உரைத்தது இங்குப் பெரிதும் மதிக்கத்தக்கது. மாரியைச் சிறப் பித்துப் பாட்டுடைத் தலைவனாகிய பாரியைச் சிறப்பியாதவர் போலக் கூறினும் இதனால் பாரிக்கு இழிபின்றாம். மாரிக்கும் பாரிக்கும் ஓர் இழிபில்லை யென்பதே பெற்றாம்.

இவ்விதம் உவமை யமைத்தலை, பயனிலை புரிந்த வழக்கென் பர் தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசியர், பிற நூலாசிரி யர் பிறவாறும் கூறுப.

(இன்னும் வரும்.)

# கல்யாணி பெற்ற கட்டழகி.

ஒரு சிறு நவீனம்.

(ஆனந்த முருகன்)

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று. (குறள்)

ஷண்முகானந்தபுரம் பெரியதோர் பட்டணமன்ருயினும் வாசஞ்செய்வதற்கு மிகவும் சௌகரியமான அழகியதோர் சிறிய நகராகும். ஓர் புறம் சிறிய மலைச்சாரலொன்று இந்நகரத்தைச் சிறப்புறச் செய்கிறது. அம்மலைச்சாரலினின்றும் அமைதியாய் ஓடிவரும் அருவியொன்று அவ்வூரைச் சுற்றிலும் வளைந்து வளைந்து சென்று அச்சிறு நகரை அழகுற வமைக்கிறது. அந்நகரின் அருகாமையில் சோலைகள் பல அழகுடன் மிளிர்ந்து, எப்பொழுது பார்த்தாலும் மெல்லிய பூங்காற்றை மெல்லென வீசிக்கொண்டிருக்கின்றன.

இவ்வாறு இயற்கை யழகுகளுடன் பொலிந்திலங்கும் அவ்வினிய நகரில் பல வைசியர்களும், வேளாளர்களும் அந்தணர் சிலரும் வாசஞ் செய்துவந்தனர். அவ்வூரிலுள்ளவர்களிலெல்லாம் நாருயணஞ் செட்டியார் என்னும் வைசியரொருவரே மிகவும் செல்வம் படைத்தவராயிருந்தார். இவர் பர்மா தேயத்தின் தலைநகராகிய இரங்கூன்மா நகரில் கடையொன்று (Money-lending Firm) வைத்து மிகுந்த விரிவாக லேவாதேவித் தொழிலை நடத்திவருகிருர். ஷண்முகானந்த புறத்தை யடுத்து, ஏராளமான நன்செய் நிலங்களுமுண்டு. நாராயணஞ் செட்டியாருக்கு இப்பொழுது வயது நாற்பதிருக்கலாம், சிறிது கருப்பான மெலிந்த திரேகமுடையவர். அடிக்கடி ஏற்படும் வியாதிகளினுல் உடம்பின் வலிமை குன்றியவர். பதினுன்கு வயதில் ஒரேயொரு ஆண் குழந்தை மட்டும் இவருக்குண்டு. மிகவும் உத்தமியான இவருடைய மனைவி சில மாதங்களுக்குமுன் காலகதியடைந்து விட்டாள். அக்கற்பு மலர்க் கொம்பரன்னுளிறந்தது பற்றி நாருயணஞ் செட்டியார் கொண்ட துக்கம் கூறுந்தரத்தன்று.

சுந்தர நாதன் என்னும் பெயரிய நாராயணஞ் சேட்டியாரின் புதல்வன் மிகுந்த புத்திக் கூர்மையுள்ளவன். ஒருமுறைசொல்லிக் கொடுக்கும் பாடங்களை யெல்லாம் உடனே யுணர்ந்துகொள்ளும் சக்தி வாய்ந்தவன். தாய் விட்டுப்போன தனிக்குழவியான இச் சேயின் மீது நாராயணஞ் செட்டியார் அளவுகடந்த அன்பு பூண்டிருந்தார். சிறு வயதிலேயே தனது அன்னையைப் பறி கொடுத்தேங்கிய சுந்தர நாதனது கலக்கத்தைக்காணப் பொராதவராகி நாராயணஞ் செட்டியார் அவ்விளவலுக்கு வேண்டிய ஆறுதல் கூறி, தமக்கு அடிக்கடி ஏற்படும் நோயை ஆங்கில வைத்தியத்தின் மூலம் சௌகரியப்படுத்திக் கொள்ளும் பொருட்டும் தமது மைந்தனின் கவலையை மாற்றும் பொருட்டும் "சென்னை" யில் சிறிது காலம் தங்கிவரலாமென முடிவுசெய்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் செய்யத் தொடங்கினர்.

ஃ ஃ ஃ ஃ

சென்னை, திருவல்லிக்கேணியில் அழகியதோர் பெரிய காம்பவுண்டின் மத்தியில் வனப்புவாய்ந்த பங்களா ஒன்று இருந்தது. அப்பொழுதே புதிப்பிக்கப்பட்டதாகக் காணப்பட்ட அப்பங்களாவில் எங்கு பார்த்தாலும் அலமாரிகள், மேஜைகள், நாற்காலிகள், நிலைக்கண்ணாடிகள், சித்திரப்படங்கள், மின்சார விளக்குகள் முதலியவை நிறைந்து, பளிங்குக் கற்கள் பரப்பப்பட்ட தரை முழுதும் இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பெற்று மிகுந்த சிங்காரமாகக் காணப்பட்டது. அப்பங்களாவின் வாயலில் "சுந்தர விலாஸ்" என்று பொறிக்கப்பட்ட இரு பித்தளைத் தகடுகள் பதிக்கப்பெற்றிருந்தது. அச்சிங்கார மாளிகையைச் சுற்றிலும் ஆங்காங்கு பற்பல அழகிய குரோட்டன்ஸ் செடிகள் மிக விநோதமாகக் கத்தரிக்கப்பட்டுப் பார்க்க வெகு ரமணீயமாக விருந்தன. அவ்வழகிய பங்களாவிலுள்ள சில வேலையாட்கள் அங்குமிங்குமாகத் தத்தம் வேலைகளைக் கவனித்துக் கொண்டு திரிந்தனர். சிறிது நேரத்திற்கெல்லாம் அழகியதோ மோட்டார் வண்டி அப்பங்களாவின் வாயிலில் வந்து நின்றது. உடனே உள்ளிருந்து நாராயணஞ் செட்டியார் தமது குமாரனை சுந்தரநாதனுடன் வண்டியை விட்டுக் கீழே யிறங்கிப் பங்களாவிற்குள் சென்றார். வேலையாட்கள் வண்டியிலிருந்த சாமான்களை யெடுத்துப் பங்களாவிற்குள் சேர்த்தனர். தனயனும் தந்தையும் முதல் நாளே தங்கள் ஊராகிய ஷண்முகானந்தபுறத்தினின்றும் புறப்பட்டு அன்று முழுதும் பிரயாணஞ் செய்தவர்களாதலால் விரைவில் ஸ்நானம் செய்து போஜனமுண்டு களைப்பாற்றினர்.

நாட்களும் பல கடந்து மாதங்களும் அருயின. நாராயணஞ் செட்டியார் சென்னையிலுள்ள பிரபல டாக்டரான R. கிருஷ்ண னவர்களிடம் மருந்து சாப்பிட்டுவந்ததில் அரைவாசிக்குமேல் குணமடைந்துவிட்டது. அன்னவரின் புதல்வன் சுந்தரநாதனும் ஆங்குள்ள கல்லூரியொன்றில் ஆங்கிலமும் தமிழும் பயின்று வந்தான். நாராயணஞ் செட்டியாரும் கவலையென்பதேயில்லாமல் மிகுந்த உல்லாசமாகச் சென்னையிற் காலங்கழித்து வந்தார். இவ் விதமிருக்கும்பொழுது சுந்தரநாதனுக்குக் கோடை காலத்திற் காகக் கலாசாலை விடுமுறைநாள் வந்தது. அவ்வமயம் நாராயணஞ் செட்டியார் தமது சொந்த ஊராகிய ஷண்முகானந்தப்புறத்திற்கு ஓர் முறை சென்று வரலாமெனக் கருதி, அவ்வாறே தமது மைந்தனையும் அழைத்துக்கொண்டு ஷண்முகானந்தபுறத்திற்கு வந்து சேர்ந்தார்.

நாராயணஞ் செட்டியாரும் சந்தர நாதனும் ஷண்முகானந்த புறத்திற்கு வந்து ஒரு வாரமாகிவிட்டது. அவ்வூரிலுள்ள பிர முகஸ்தர்கள் யாவரும் நாராயணஞ் செட்டியாரை அடிக்கடி வந்து கண்டு சென்றனர். அவரும் ஒவ்வொருவருடனும் அன்புடன் அளவளாவி அங்கு ஆகவேண்டிய வேலைகளனைத்தையும் சுறுசுறுப் புடன் கவனித்துவரலானார். பட்டணத்திலிருந்து தங்கள் சிநேகி தன் வந்திருக்கிறானென்றறிந்த அவ்வூரிலுள்ள சிறுவர்கள் யாவ ரும் அதிக சந்தோஷத்துடன் சந்தர நாதனை வந்து கண்டு களிப் புற்றார்கள். சுந்தரநாதனும் மிகுந்த ஆனந்தமாய் அவர்களுடன் கூடி விளையாடுவதில் தனது பொழுதைக் கழித்தான். சில நாட் கள் சென்றன. நாராயணஞ் செட்டியார் மறு மணம் செய்துகொள் ளப் போகிறார் என்றதோர் வதந்தி அவ்வூரில் மிகுந்த பலமாயுண் டாயிற்று. ஆம்; அது உண்மைதான். சென்னையிலிருந்து வந்த சில நாட்களிலேயே அவரை மறு மணம் புரிந்துகொள்ளுமாறு அவ ரது ஆப்த நண்பர்கள் வற்புறுத்தினார்கள். நாராயணஞ் செட்டியார் தமக்கு நாற்பது வயதுக்குமேலாகிவிட்டதை யுத்தேசித்துச் சிறிது தயங்கினார். "ஆகா! நன்றாயிருக்கிறது. உங்களைப்பார்த்தால் இருபத் தைந்து வயதுள்ள வாலிபரென்றே யாருங் கூறுவார்கள். உங்களு டைய திரேகக்கட்டும், மனோவுறுதியும், வேலைகளைத்திறம்பட நடா த்தும் சாமர்த்தியமும் வேறு யார்க்கு வரும்! இருந்தாலும் இருந் தார்கள் இக்காலத்திய வாலிபர்கள்! ஒரு கூடை நெல்கூடத் தூக்க முடியாது! உங்களுடைய பலத்திற்கு நீங்கள் பத்துவண்டி பச்சை விறகையும் பத்து நிமிஷங்களில் வெட்டித் தள்ளிவிட மாட்டீர் களா! தவிரவும் உங்களுடைய அந்தஸ்தென்ன; கௌரவமென்ன; வீட்டில் மனைவியென்ற பெயருக்காவது ஒரு பெண் இல்லாம

யிருக்கலாமா"! என்று அடிக்கடி போதித்துவந்த ஆவுடையப்ப செட்டியாரின் வார்த்தைகளினுலும் அடுத்தவீட்டு அடைக்கம்மையாச்சியின் வார்த்தைகளினுலும் முதலில் சம்மதிக்காதிருந்த நாராயணஞ் செட்டியார் கடைசியில் ஒருவாறு இணங்கிவிட்டார். பெண்களும் பல பார்க்கப்பட்டு முடிவாக அவ்வூரையடுத்துள்ள அழகாபுரி என்னும் சிற்றூரில் வசித்துவரும் கல்யாணி ஆச்சியின் மகள் மாணிக்கவல்லி என்னும் பெண் நிச்சயிக்கப்பெற்றது. மாணிக்கவல்லிக்கு வயது பதின்மூன்று இருக்கலாம். நான்கு வருடங்களுக்குமுன் அவளுடைய தந்தையார் விஷபேதியிலிறந்துவிட்டார். கைம்பெண்ணுன, மாணிக்கவல்லியின் தாயாருக்கு அவளைத்தவிர வேறு குழந்தைகள் கிடையாது.

தற்போது அவர்கள் இருந்துவரும் வீட்டைத்தவிர வேறு சொத்துக்களெதையும் மாணிக்கவல்லியின் தகப்பனுர் வைத்துவிட்டுச் செல்லவில்லை. அவளுடைய தாயார் கல்யாணி ஆச்சியின் ஸ்ரீதனப் பணமாத்திரம் ரூபாய் ஏழாயிரம்வரை மிகுதியிருந்தது. அதை வைத்துக்கொண்டு மிகுந்த செட்டாகக் காலங்கழித்து வந்தார்கள். நாராயணஞ்செட்டியாருக்குப் பெண் பார்க்கிறுர்கள் என்ற செய்தி பரவியவுடன், கஷ்ட ஜீவனம் செய்துவந்த கல்யாணி ஆச்சிக்கு; ஏன்; தனது பெண்ணை அவருக்கு விவாகஞ் செய்து கொடுக்கக்கூடாது என்ற எண்ணமுண்டாயிற்று. அவ்வாறு மாணிக்கவல்லியை அவருக்கு விவாகஞ் செய்துகொடுத்தால், பெரியயிடத்துச் சம்மந்தமென்று தனக்கும் பெருமையுண்டாகும். தனது மகளும் மிகுந்த சுகங்களை யனுபவிப்பாள். பொருளும் தங்களுக்கு அதிகமுண்டாய்விடும் என்ற மூட எண்ணம் கல்வியறிவில்லாத கல்யாணி ஆச்சியின் கருத்தில் தோன்றிக் கட்டழகியான தனது ஒரே புத்திரியை விற்றுவிடச் சம்மதித்து விட்டாள். பெண்ணுக்காக முப்பதினுயிரம் ரூபாய் கல்யாணி ஆச்சியிடம் கொடுத்துவிடுவதென்றும், பெண்ணின் நகைகளுக்காக ஐயாயிரம் ரூபாய் கொடுப்பதென்றும், கல்யாணச்சிலவு முழுமையும் நாராயணஞ் செட்டியாரே ஏற்றுக்கொள்வதென்றும் பேசி முடிவுசெய்யப்பட்டுக் கல்யாண நாளும் நிச்சயக்கப் பெற்றது.

தேசாபிமானம்—சமுகாபிமானம் நிறைந்த சில பெரியார்களையும், சீர்திருத்த நோக்கங்கொண்டுள்ள வாலிபர் சிலரையுந் தவிர ஏனைய ஜனங்கள் யாவரும், தைமாதம் பதினைந்தாம் தேதி நாராயணஞ் செட்டியாருக்கு விவாகம் நடைபெறப் போகிறதென வறிந்து அதிகமகிழ்ச்சி யடைந்தார்கள். மிகுந்த ஆடம்பரமாகக் கல்யாணத்தை நடத்தவெண்ணி நாராயணஞ் செட்டியார் பணத்தைப்

பாராது வாரியிறைத்துக் கொண்டிருந்தார். விவாக தினமும் நெருங்கிற்று. ஏராளமான மக்கள் விவாகத்திற்கு வந்தனர். கடைசியில் குறிப்பிட்ட தினத்தன்று, ஸ்ரீமான் நாராயணஞ் செட்டியாரவர்களுக்கும், ஸ்ரீமதி மாணிக்கவல்லி தேவிக்கும் மிகுந்த வைபவத்துடன் கல்யாணம் நடந்தேறியது. வந்திருந்த ஜனங்களனைவருக்கும் பத்து நாட்கள் வரை மிகுந்த சம்பிரமமாகப் போஜனாதிகள் வழங்கப்பெற்றது. கடைசியில் எல்லோரும் தகுந்த வெகுமதிகளுடன் தத்தம் வீடுகளுக்குச் சென்றனர். தாத்தா-பேத்தி கல்யாணமெனச் சில குறும்புக்கார இளைஞர்களும் நாராயணஞ் செட்டியாருக்கு முன்னிலையிலேயே கூறிக் கேலிசெய்தார்ப்பரித்துக் கொண்டிருந்தனர்.

ஃ ஃ ஃ ஃ

இப்பொழுது நாராயணஞ்செட்டியார் புது மனிதராக மாறிவிட்டார். எந்த ஊரில் என்ன வேடிக்கை நடந்தபோதிலும் தமது பச்சிள மனைவியையழைத்துக்கொண்டு அவ்வேடிக்கையைக் கண்ணுறச் செல்வார். மாணிக்கவல்லிக்கு வித்தை கற்பிக்கும் பொருட்டுச் சில உபாத்தியாயினிகளையும் ஏற்படுத்தினார். சில சமயங்களில் பதினான்கு வயதுள்ள தமது பாலகனும் பதின் மூன்று வயதுள்ள தமது மனைவியும் ஒன்றாக விளையாடும்பொழுது தாமும் அவர்களுடன் கூட விளையாடி மகிழ்வார். மாணிக்கவல்லியின் அன்னை கல்யாணி ஆச்சியும் சில நாட்கள் ஷண்முகானந்தபுறத்திலும் சில தினங்கள் அழகாபுரியிலுமாகக் காலங் கழித்து வந்தாள். சுந்தரநாதனுக்கும் கலாசாலை விடுமுறை நாட்கள் கழிந்து திறப்பு நாள் வந்தது. தாம் சென்னைக்குச் செல்லச் சௌகரியப்படாமையால் நாராயணஞ்செட்டியார் அவனை மாத்திரம் அங்கு அனுப்பச் சம்மதியாது தமது நகருக்கு அருகிலுள்ள புதவைமாநகருக்கு அனுப்பி அங்குள்ள 'மகாராஜாஸ்' காலேஜியில் பயின்று வரும்படி ஏற்பாடு செய்து வேண்டிய வசதிகளும் செய்து கொடுத்தார். அதுபோல் சுந்தரநாதனும் ஷை காலேஜில் ஏழாம் வகுப்பில் பயின்று வருகிறான். நாராயணஞ் செட்டியாரும் அடிக்கடி புதவைநகருக்கு வந்து கவனித்துக் கொண்டிருப்பதுடன் தமது வாழ் நாட்களையும் மிகுந்த சந்தோஷத்துடன் கடத்திவருகிறார்.

விநாடிகள் நாழிகைகளாகவும், நாழிகள் நாட்களாகவும், நாட்கள் வாரங்களாகவும், வாரங்கள் மாதங்களாகவும், மாதங்கள் வருடங்களாகவும் கடந்து காலச்சக்கரம் சுழன்று கொண்டேயிருக்கிறது. முன்கூறிய சம்பவங்கள் நடந்து ஐந்து ஆண்டுகளாயின. சுந்தரநாதன் புதவை மகாராஜாஸ் கலேஜிலேயே F. A. வகுப்பில்

வாசித்துக் கொண்டிருக்கிறான். அவனுடைய பரந்த முகமும், விரிந்தமார்பும், கனிந்த வீரப்பார்வையும், கனிந்தசொற்களும் பார்ப்பவர்களை அப்படியே பிரமிக்கச் செய்கின்றன. ஒவ்வொரு வகுப்பிலும் முதன்மையாகத் தேறிவந்த படியால் அக்காலேஜிலுள்ள உபாத்தியாயர்களனைவரும் சுந்தரநாதன் மீது அளவுகடந்த அன்புகொண்டிருந்தனர். இவனுக்கும் இவ்வருடக் கடைசியில் மணஞ்செய்துவிட வேண்டுமென நாராயணஞ் செட்டியார் நிச்சயத்துப் பெண்ணும் பார்த்து முடிவுசெய்து வைத்திருக்கிறார்.

மாணிக்கவல்லியோ இப்பொழுது பதினெட்டு வயது மங்கையாக விருக்கின்றாள். மாசற்ற அவளுடைய முகம் பூரணச்சந்திரன் போற் பிரகாசிக்கின்றது. சுருண்டு சுருண்டு நெளிந்து விளங்கிய அவளுடைய கருங்கூந்தல், அவளது அகன்ற நெற்றியின் மேல் பாகத்திலும் காதுகளின் மேலும் புரண்டு புரண்டு படிந்து சென்றன. காதளவோடிய கண்களிற் கருணையும் கனிவும் கலந்திருந்தன. மதன் விற்கள்போன்ற புருவங்களும் எடுப்பான நாசியும் முல்லையரும்பு போன்ற பற்களும், செந்தாமரை போன்ற இதழ்களும், சங்கையொத்த கண்டமும், ஆலிலை போன்ற வயிறும், தந்தத்தினாற் கடைந்தெடுக்கப் பட்டவை போன்ற மங்களகரமான கைகளும், இன்னும் அழகேவடிவான மற்ற ஒவ்வோர் அவயவங்களும் பார்ப்போர் கண்களையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்து பிரமிக்கச்செய்தன; அன்னம்போன்ற நடையும் மின்னல் போன்ற இடையும் வாய்ந்த அத்தேன் மொழியாள் குடும்பவேலைகளைக் கவனித்துக் கொள்வதிலும், தையல், சித்திரம், சங்கீதம் முதலிய கலைகளிலும் மிகவும் தேர்ச்சியடைந்திருந்தாள்.

இத்தகைய அணங்கை மனைவியாகப் பெற்றிருந்த நாராயணஞ் செட்டியாரின் இப்பொழுதைய சிறப்பைச் சிறிது கூறாது விடின் மிகையாகு மன்றோ! ஆகையால் அதையும் சிறிது கூறிவிடுகின்றேன்.

பல நாட்களாக அவரை யணுகாதிருந்த நோய்கள் இப்பொழுது ஒவ்வொன்றாக அவரை ஆட்சிபுரியத் தொடங்கிவிட்டன. பலவிதமான மருந்துகளையும் அருந்திப் பார்த்தாய்விட்டது. ஒன்றிலும் குணப்படவில்லை. வைத்தியர்களும் மாந்திரீகர்களும் "நாராயணஞ் செட்டியார் வீடுதான் நமக்கிடம்" என நாளுக்கு நாள் வந்து நிறைந்து கொண்டிருந்தனர். இன்று தினம் சுகமாயிருப்பார். நாளை ஏதாவது ஒரு கைகால் பிடிப்பு; வாய்வுக் குத்து; தலைவலி ஏதாவது ஒன்று வந்துவிடும். அப்பால் பத்து நாட்களுக்குப் படுக்கைதான். பச்சைவெட்டு மருந்துகளைச் சாப்

பிட்டு வாய் வெந்துபோயிற்று. பற்கள் உதிர்ந்துவிட்டன, கண் குழிந்து பார்வை மங்கிவிட்டது. உடம்பில் சதைப்பற்றில்லாமல் எலும்புகளனைத்தும் வெளியே எட்டிப்பார்த்தன. கால்கள் மூன்றுய்விட்டன. (கம்பு ஒன்று கூட) இந்த லெட்சணத்தில் மாணிக்கவல்லி அருகிலில்லா விட்டால் "மாய்க்கவய்யி! மாய்க்கவய்யி" என்று அலறிக்கூவி அருகிலழைப்பார். பொப் பொப் என்று இவர் பேசுவது எவர்க்கும் எளிதில் விளங்காது. கல்வியில் தேர்ச்சியடைந்துள்ள மாணிக்கவல்லி தனது சிறந்த அறிவினுல் எப்பொழுதும் தன் பர்த்தாவினருகிலே யிருந்து, அவருக்கிதமான வார்த்தைகளைக் கூறிக்கொண்டு அவருடைய தேகாரோக்கியத்தைக் கவனித்து வந்தாள்.

ஃ ஃ ஃ ஃ

ஒருநாட் காலை பத்துமணி யிருக்கலாம், ஷண்முகாநந்த புறத்தில் நாராயணஞ் செட்டியார் தமது மாளிகையின் முன் புறத்தி லுள்ள ஓர் பெரிய ஹாலின் மத்தியில் சாய்மான நாற்காலியொன்றில் சிறிது அசௌக்கியத்துடன் சாய்ந்து கொண்டிருக்கிறுர். வலதுபுறம் சுந்தரநாதனும் இடதுபுறம் மாணிக்கவல்லியும் சிறிய நாற்காலிகளிலமர்ந்து அவருக்குவேண்டிய ஆறுதல் கூறிப்பொதுவாகச் சம்பாஷித்துக் கொண்டிருக்கின்றனர். அவருக் கெதிரில் உயரமான நாற்காலியொன்றில் மருந்துள்ள சில கண்ணுடிச் சீசாக்களும் சோடாப் போத்தல்கள் சிலவும் வைக்கப்பட்டிருந்தன. சுந்தரநாதன் ஷண்முகானந்தபுறத்திற்கு வந்தவுடனேயே தந்திரம் நிறைந்த வைத்தியர்களும் மாந்திரீகர்களும் சொல்லாமற் பறந்துவிட்டனரென்பதையும், இப்பொழுது அவன் நண்பரான ஆங்கில வைத்தியரொருவர் மருந்து கொடுத்து வருகிறுரென்பதையும் இவ்விடத்திற் சொல்ல வேண்டியிருக்கிறது.

பின் சிறிது நேரமாயிற்று. தந்திச் சேவகனெருவன் தந்தியொன்றைக் கொண்டுவந்து கொடுத்து நாராயணஞ்செட்டியாரிடம் கையெழுத்து வாங்கிச் சென்றுன். உடனே சுந்தரநாதன் மிகுந்த பரபரப்புடன் அத்தந்தியின் மேலுறையைக் கிழித்துத் தனது மனதுக்குள்ளேயே அத்தந்தியை வாசிக்க ஆரம்பித்தான். ஆங்கிலம் பயின்றறியாத மற்ற இருவரும் அவன் என்ன கூறப்போகிறுனே வென்று அவனது முகத்தையே ஆவலுடன் கூர்ந்து நோக்கினர். தந்தியின் செய்தியை யுணர்ந்த சுந்தரனின் முகம் ஓர் விதமாய் மாறுபட்டதைக் கண்ட நாராயணஞ் செட்டியார், "என்ன? என்ன?" வென்று மிகுந்த ஆத்திரத்துடன் விஷயத்தைப் புகலும்படி வினவினுர். சுந்தரநாதன் அதற்குப் பதிற்கூற

நாவெழாதவனுய அத்தந்தியின் பின்புறத்தில் கீழ்க்கண்ட விதம் தமிழில் எழுதிக்கொடுத்தான்.

ரெங்கூன்,
5-6-30

"இவ்விடம் தங்கள் கடை பெருத்த நஷ்டத்திற்குட்பட்டு விட்டது, கடையிலுள்ள வேலையாட்களெல்லாம் போனபக்கம் தெரியவில்லே, செல்காரர்கள் அவ்விடத்திற்கும் வாரண்டெடுக்கப் போவதாய்த் தெரிகிறது, கடையிலுள்ள தஸ்தவேசுகள் யாவற்றை யும் கோர்ட்டில் ஒப்புவித் திருக்கிறது.

அரங்கநாதன் செட்டியார்,

என்று எழுதப்பட்டிருந்ததைக்கண்டு நாராயணஞ் செட்டியார் அப்படியே கலங்கிப் போய் விட்டார். மாணிக்கவல்லியும் அவ் வாறே ஸ்தம்பித்து விட்டாள். கடைசியாக நாராயணஞ் செட்டி யார் பெருமூச் செறிந்து "ஆகா! மோசம் போனேம்; நாம் வாழ்ந்த வாழ்வென்ன; அடைந்த பெருமை யென்ன; வாழையடி வாழையாக நம்மிடம் மலைபோலிருந்த செல்வம் இப்பொழுது மடுப்போலாகிவிட்டதல்லவா; ஆகா: என்னே இச்செல்வத்தி னியல்பு; இன்று பிச்சைக்காரனுயுள்ளவன் நாளை லெட்சாதிபதி யாகிவிடுகிருன். இன்று கோடீசுவரனுயுள்ளவன் நாளை குறுணி நெல்லுக்குத் தவிக்கிருன் என்று பலவாருகக் கலங்கினுர் அவரது கண்களிலிருந்து நீர்த்துளிகள் வர ஆரம்பித்தன. சுந்தரநாதனே ஒன்றும் பேச நாவெழாதவனுகித் தாரை தரையா கக் கண்ணீரை வடித்தான். மாணிக்கவல்லியின் வாள் விழிகளி லிருந்து ஜலம் முத்து முத்தாகச் சொட்டவாரம்பித்தது, கடைசி யில் நாராயணஞ்செட்டியார் ஒருவாறு தேறிச் சுந்தரநாதனை நோக்கி, "சுந்தரம்: போனது போகட்டும், சில நாட்களுக்கு முன்னதாகவே கடை நிரம்ப அபாய நிலையிலிருக்கிறது, தகான்பண்ண முடிய வில்லை. எவ்விதமாகவாவது பணம் அனுப்பினுல்தான் சௌகரிய மாயிருக்கும் என்று ஏஜெண்ட் கடிதமெழுதி யிருந்தார். எனது அசௌகரியத்தினுல் நான் அதற்குத்தக்க ஏற்பாடுகளெதுவும் செய் யாமல் அஜாக்ரதையாக இருந்துவிட்டேன். அன்றியும் உனக்கும் அதைப்பற்றியொன்றும் தாக்கல் தெரிவிக்கவில்லை. மாணிக்கத்தி னிடங்கூட அதைப்பற்றி யெதுவும் பிரஸ்தாபிக்கவில்லை, இனி அதை நினைந்தாவதென்ன? உம்—சுந்தரம் எனதாவி இனி வெகு நாள் தங்காதென்று கருதுகிறேன். ஐயோ யான்பாவி; நிறைந்த செல்வமிருந்தபொழு தெல்லாம் உனக்கு விவாகஞ் செய்விக்காதிருந்துவிட்டேன். இனி எப்பொழுது நடை பெறுமோ; ஹா சுந்தரம் சிறு வயதிலெல்லாம் ராஜோபசாரமாய்

வாழ்ந்த நீ இன்று முதல் எவ்வாறு எளிய வாழ்க்கை நடத்தப் போகிறாய்; அந்தோ! மாணிக்கவல்லி உன்னையுமன்றோ யான் அநியாயமாய்ப் பல கஷ்டங்களுக்குள்ளாக்கி விட்டேன். நீ பச்சிளங் குழவியாயிருக்கும்பொழுதே பலருங்கண்டு பரிகசிக்கும் வண்ணம் பாவியான் வதுவைசெய்து கொண்டேன். உனக்கேற்ற உத்தம வாலிபனை மணந்து உலக இன்பத்தையனுபவிக்கவேண்டிய நீ, என்னுடைய பணத்திமிறினால் இவ்வாறு கஷ்டங்களுக்காளாகும்படி நேர்ந்தது. உம் போகட்டும், சுந்தரம்; கடன்காரர்கள் நமது சொத்துக்களைச் சின்னாபின்னமாக்கிவிடாதபடி ரிஸீவர் நியமித்து மிகுந்த ஜாக்கிரதையாக நீயும் கவனித்துக் கொடுக்கவேண்டியவற்றைக் கொடுத்து, வாங்கவேண்டியவற்றை வாங்கி எல்லாக் காரியங்களையும் ஒழுங்காக முடித்துக்கொள். கடைசியாக மிஞ்சும் சொத்தில் மூன்றிலொரு பாகம் மாணிக்கவல்லிக்குக் கொடுத்துவிடு, என்று மிகவும் தழுதழுத்த குரலிற் கூறி, அவர்களிருவரையும் மிகப்பரிதாபமான பார்வையால் பார்த்தார். அன்றுமுழுதும் அவர்கள் மூவருக்கும் எதிலும் மனஞ்செல்லவில்லை. அன்று பகலும் இரவும் ஒருவாறாகக் கழிந்தது. மறுநாள் நாராயணஞ் செட்டியாரின் ஏற்கனவே அசௌகரியமாயிருந்த திரேகம் அபாரமான கவலையினால் மிகுந்த அபாய நிலையையடைந்தது. பொழுது ஏற ஏற அவருடைய வியாதியும் அதிகப்பட்டுக்கொண்டே வந்தது. அண்டை அயலார், உள்ளூர், உறவினர் யாவருக்கும் இவ்விஷயம் தெரிந்து அன்று தினமே வந்து கூடிவிட்டனர். அவர்கள் தங்களாலியன்ற முயற்சிகள் செய்து வேண்டியவரை வைத்தியம் பார்த்தும் சிறிதும் குணப்படவில்லை. கடைசியாக அவருடைய செல்வமும், பெயரும், புகழும் மறைந்தது போல் அன்று மாலை ஐந்து மணி சுமாருக்கு அவருடைய ஆவி இம்மண்ணுலகத்தை விட்டுப் பறந்து விட்டது.

ஃ ஃ ஃ ஃ

மேற்கண்ட சம்பவங்கள் நடந்து, ஆண்டுகளிரண்டாயின. நாராயணஞ் செட்டியார் கடை சம்பந்தமான செல்கள் ரிஸீவர் மூலம் ஒருவித ஒழுங்கு செய்யப்பட்டன. முடிவில் ரொக்கமாக ரூபாய் எழுபத்தையாயிரமும் மாணிக்கவல்லி தரித்திருந்த ரூபாய் இருபதினாயிரம் பெறுமான ஆபரணங்களும் ஷண்முகானந்த புறத்திலுள்ள மாளிகை யொன்றும் மிஞ்சின. நாராயணஞ் செட்டியார் கூறியிருந்தபடி, சுந்தரநாதன் மாணிக்கவல்லியிடம் ரூபாய் இருபத்தையாயிரம் கொடுத்து விட்டான். மாணிக்கவல்லியிடமிருந்த நகைகளை யெல்லாம் அவளையே வைத்துக் கொள்ளும்படிக்கும், மாளிகையை மாத்திரம் தனக்கு விடும்படிக்கும் ஆனால் மாணிக்கவல்லி எப்பொழுதும் அவ்வீட்டிலேயே யிருந்துவரலா

மென்றும் கேட்டுக் கொண்டதன்பேரில், அவளும் அவ்வாறே சம்மதித்தாள்.

இப்பொழுது மாணிக்கவல்லியிடம் சுந்தரநாதன் பகிர்ந்து கொடுத்த ரூ. 25 ஆயிரமும் 20 ஆயிரம்ரூ. பெறுமான ஆபரணங்களும் இருக்கின்றன. அவன் தாயார் கல்யாணி ஆச்சியும் ஷண்முகானந்த புறத்திற்கே வந்து தனது பணம் ரூ. 45 ஆயிரத்தையும் மாணிக்கவல்லியிடமே கொடுத்து அவளுடனே வாழ்ந்து வருகிறாள். இப்பொழுது மாணிக்கவல்லியின் சுற்றத்தார்கள் அவளை ஸ்வீகாரம் செய்து கொள்ளும்படி மிகவும் வற்புறுத்துகின்றனர். அவளும் அவர்களுடைய போதனைக் கொப்பத் தனது பொருளிற் பெரும்பான்மையான தொகையைக் கொடுத்து ஸ்வீகாரஞ்செய்து கொண்டு மீதத் தொகையையும் அவனிடமே கொடுத்து அவன் கையை எதிர்பார்த்துக் கொண்டு காலங்கழிக்கலாமா; அல்லது புதிய சீர்திருத்தக்காரர்கள் விரும்புகிறபடி ஆண்மையும் அறிவுமுள்ள வாலிபர் ஒருவரைப் புனர் விவாகம் செய்துகொண்டு இனிது வாழலாமா; என ஏங்குகின்றாள்.

சுந்தரநாதனே தன்னிடமுள்ள ரொக்கம் ரூபாய் 50 ஆயிரத்தையும் கொடுத்துத் தனது சமுகத்திலேலார் பெண்ணை மணம்புரிந்து அதனால் மேலுங் கடனுக்காளாகி ஊரார் சிரிக்கக் கோவணாண்டியாய்த் திரியலாமா; அல்லது கையிலுள்ள ரூபாயை வைத்துக் கொண்டு வேறு சமூகத்தில் மிகுந்த அழகும் கல்வியறிவுமுள்ள பெண்ணை மணம்புரிந்து கொண்டு மகிழ்ச்சியுடன் வாழலாமா; என அடிக்கடி எண்ணிக் கலங்குகின்றான்.

அவ்வாறு அவன் எண்ணும் பொழுதெல்லாம் புதுவை நகரில் தன்னுடன் காலேஜில் பயின்று கொண்டிருந்த நற்குணவதியான கோமளவல்லியின் எழில் நிறைந்த உருவம் அவனது அகக் கண்ணில் தோன்றித் தோன்றி மறைகிறது. தனது சொத்து முழுமையுமிழந்து கடனாளியானலல்லாது தனது சமுகத்தில் தான் மணம் புரிந்து கொள்ள வியலாது என்ற திடமான எண்ணமே அதைப்பற்றி அவன் நினைக்கும் பொழுதெல்லாம் அவன் மனதில் படுகிறது.

இவ்வாறு மாணிக்கவல்லி ஓர் புறம் மாறாத துயரத்துடனும், சுந்தரநாதன் மற்றொருபுறம் அடக்கொணாத் துன்பத்துடனும் தங்கள் சமூகத் திட்டங்களை யெண்ணி யெண்ணிக் கலங்கிய நெஞ்சுடன் காலங்கழித்து வருகின்றனர்.

இவர்களுடைய வருங்கால வாழ்க்கையை எவ்வாறு அமைத்தல் இயல்புடைத்து என்பதை வாசகர்களை நிர்மாணிக்க வேண்டுகின்றேன்.

---

# தமிழ் நூல் முன்னேற்றம்.

(ரேவரண்ட் H. A. பாப்லி துரையவர்கள் B. A. கல்கத்தா.)

இப் பத்திரிகையின் ஆக்கியோரின் வேண்டுகோளுக்கிணங்கி யான் ஓர் சிறிய வியாசம் எழுதத் துணிந்தேன். எனினும் இப் பணிக்குத் தகுதியுள்ளவன் என்று எண்ணுமல் முதலில் வாசிப் போர் இவ்வியாசத்தின் குறைகளெல்லாம் மன்னித்துவிடவேண் டும் என்று மன்ருடி எழுதப்புகுந்தேன். இது பொழுது யான் தமிழகம் விட்டு பங்காளி நாட்டில் வசித்து வருவதால் தமிழ் மொழியின் வல்லமை என் மனதை நெருக்கி வளர்ப்பிக்கின்ற தில்லை என்று ஒத்துக்கொள்ளல் வேண்டும். அங்ஙனமிருந்தும் எனது நூற்ருெகுதிகளில் அநேக தமிழ் நூற்கள் இருக்கின்றன. அவைகளை வாசித்து வருகிறேன் யான்.

இப் பங்காள நாட்டிலே சென்ற ஐம்பது வருடங்களாக இலக்கியமும் கல்வியும் அதிகரித்து வளர்ந்து வந்ததை நாம் கவனித்தறிகிருேம். இவ்வளர்ச்சி தானுகவே உண்டாகாமல் தேச அபிமானப் பெருக்கினுலும் சுய நாட்டின் நாகரீக நேசத்தினுலும் பகிம் சந்திர சட்டர்ஜி, ரவீந்திரநாததாக்கூர் முதலிய நூற்பெரி யோர் முயன்ற முயற்சிகளாலும் உண்டாக்கப்பெற்ற தென்று அறியலுற்ருேம். இவர்கள் அந்நிய மொழிகளில் வல்லவராயுன போதிலும் அயல் நாட்டு மொழியை வளர்ப்பிக்க இயன்ற வழி யெல் லாம் முயற்சி செய்தார்கள் என்பது திண்ணம். சில நாளைக்கு முன்னரே யான் நற்கண்டா என்னும் இடத்திலும் சிம்லா மலை நாட்டிலுள்ள மற்ற இடங்களிலும் சில நாளாகத்தங்கி அவ்விடங் களில் விளைந்து கொள்ளும் நூற்றுக்கணக்கான அழகிய புட்பங் களைக் கவனித்து மகிழ்வுற்றேன். இவையெல்லாம் வானத்தின் பெருக்கத்தினுலும் குளிர் காற்று நயத்தினுலும் உண்டாகிப் பூத் துக் கொண்டிருக்கின்றன. அது போல நூனய வளர்ச்சி உண் டாகத் தக்கதாக ஏற்ற நிலைமையும் ஆகாரமும் அமைந்து கொள் வது அவசியம் என்றறியல் வேண்டும். நமது தமிழகத்தில் நூன யம் பெருக விரும்பின் அப்பெருக்கத்திற்கேற்ற அமைப்புகள் உண்டாயிருத்தல் அவசியம் என்று அறிந்து அவைகளை இயன்ற மட்டிலும் செய்வித்தற்கு முயலல் வேண்டியது.

இவ்வமைப்புகள் யாவை என்று சற்று ஆராய்வோம்.

(1) முதலில் தமிழ்நூனேசம் என்பது. இக்காலத்தில் நமது தமிழ்நாடுகளில் படித்தவர் பெரும்பான்மையோர் மேற்கத்திய

நாடுகளின் நூற்களை பெரிதென்று எண்ணிக்கொண்டு அவைகள் அனுசரித்து வருகின்றார்கள் என்று கவனிக்கிறோம். மேற்கத்திய நாடுகளின் கல்வியைத் துறந்துவிடுவது நியாயமன்று. எனினும் அதற்கு அடிமைகளாகி நடத்தல் தவறு. தேனீக்களைப்போன்று நாம் அதிலுள்ள நன்னயங்களை உட்கொண்டு சொந்தமாக்கிவிடுதல் நன்று. எனினும் நமது அய நாட்டு மொழிகளிட் இவைகளை வெளியிடவேண்டுமென்று முயலல் சிறப்புளது. ஒரு நாட்டின் உண்மையான எழுச்சி உள்ளான பண்பின் மேம்பாட்டுக்கேற்ற தென்று அறிக.

வெள்ளத்தனை மலர் மாந்தர்தம்
உள்ளத்தனையதுயர்பு.

என்று திருவள்ளுவ நாயனர் பாடினது இதற்கிசைந்தது. ஒரு நாட்டின் உள்ளான பண்பு தாய்மொழியின் கல்வியில் பேர் பெற்ற தென்பதற்கு ஐயமின்றே. ஒரு குழந்தையின் வளர்ச்சி தாய்ப் பாலைக் குடிப்பதால் உண்டானதுபோல. ஆனதுபற்றி முதலில் தாய்மொழி நேசம் அதிகரித்தல் அவசியம்.

இரண்டாவது சுய நாட்டுமொழி பெருக்கம் உண்டாக்கத்தக் கதாக தமிழ் மொழியின் மேம்பாட்டை உணர்ந்து கொள்ளும் பெரியோர் ஐக்கிய இயக்கம் செய்தல் இன்றியமையாத அவசியம். ஐரிஷ் மொழியை உயிர்ப்பித்து வளர்ப்பிக்கும் படி பற்பல நூற் பெரியோர்கள் சேர்ந்து அனேக வருடங்களாக முயற்சி நடத்திவந் திருந்தார்கள் என்று அத்தேசத்தின் சரிதையில் காணலாம். அது போல் நமது தமிழ்நாட்டிலே மனதிட்பமும் ஞானய அறிவுமுள்ள பெரியார் ஒன்றுகூடித் தொடங்தேற்றியாய் இந் நோக்கத்திற் கென்று முயற்சி செய்தல் வேண்டும்.

எண்ணியவெண்ணியார் கெய்துப வெண்ணியார்
தண்ணியராகப் பெறின்.

என்று பொய்யில் புலவர் சொன்னதுபோல் ;அவ்வாறாக முயற்சி செய்துகொண்டால் எல்லாயிடையூறுகளைத் தவிர்த்து வெற்றி பெறுவார்கள் என்பது திண்ணம்.

இப்புதிய பத்திரிகை இந்நோக்கத்தை நிறைபாக்க உதவிபுரி யக்கூடியதால் யான் வெளிப்படுவதாகத் தெரிந்து மகிழ்ந்து கொண் டேன். இப்பத்திரிகை அனேக வருடங்களாக தமிழ் ஞானய உணர்ச்சி நமது நாட்டில் பெருக்கிச் செய்வதற்கேற்ற கருவியாகும் என்று நான் நம்புகின்றேன்.

H. A. P.

---

# பர்மாவில் நம் தொழில் நிலை.

(நமது சொந்த நிருபரிடமிருந்து)

ரெங்கூன்.

சென்ற இரண்டு வருடங்களாகப் பர்மாவின் பொருளாதார நிலை சீர்கேடடைந்திருக்கிறது. நெல் சரியான விளைவின்மையும் கம்பெனிக்காரர்கள் விருப்பமாக் வாங்காமையினலேற்பட்ட விலை குறைவுமே யிதன்காரணமாகும். இதனால் விவசாயிகள், வியாபாரிகள் முதலியோர் பலருக்குப் பெருத்த நஷ்டமேற்பட்டிருக்கிறது. லோயர்பர்மாவில் சராசரி 190--200 விலைவரக்கூடிய நெல்லுக்கு இவ்வருடங்களில் 165--170 மிக அதிகமான விலையாக வாங்குவோரால் கருதப்படுகிறது. சென்ற வருஷங்களில் கூடுதலான விலைக்கு வாங்கியபின் விலை குறைவாகவிற்கும்படி நேர்ந்ததால் வியாபாரிகளிற் பெரும்பான்மையோர் மிகுந்த நஷ்டமடைந்தனர். அதனால் இவ்வருடம் வியாபாரிகள் அவ்வளவு விருப்பமாக நெல் வாங்கவில்லை. கம்பெனிக்காரர்கள் வாங்கிய நெல்லும் விவசாயிகளிடமிருந்து மிகுதியும் குறைவான விலைக்கே வாங்கப்பட்டது. நெல் கட்டிவைப்பதற்குப் போதிய வசதிகளுடைய விவசாயிகள் களத்து விலைகுறைவாக இருந்தமையால் பிறகு விலையேறுமென்று மனப்பால்குடித்து நெல்லைச்சேமித்து வைத்திருந்தனர். மார்கழி--தையில் விற்கவேண்டிய நெல்லை ஆடி--ஆவணி வரையில் வைத்திருந்தும் அவர்கள் எதிர்பார்த்தபடி விலையேறாது களத்து விலையைக்காட்டிலும் குறைவாகவே விற்கும்படியாயிற்று. இதனால் அவர்கள் அடைந்த கஷ்ட நஷ்டங்கள் கூறுந்தரத்தன்று.

இவ்வாறு, விவசாயிகள், வியாபாரிகள் முதலியோர் அடைந்த நஷ்டங்களனைத்தும் அவர்களுக்குக் கடன் கொடுத்திருக்கும் நம்மவர்களையே பாதிக்கிறது.

நெல்விளைவு, விலை முதலியவை நன்றாயிருந்தகாலத்தில், தொழில் இயன்றவரை விரிவாய்ச் செய்யவேண்டுமென்ற ஒரே நோக்கங்கொண்ட நம்மவர்கள் போட்டியின்மேல் ஆசாமிகளுக்கு வட்டிகுறைவாகவும் தொகை அளவுக்குமேலும் கொடுத்த, இப்பொழுது அவற்றை வசூல்செய்யப்படும் கஷ்டங்களும் தயரங்களும் கூறிமுடியா.

நில சட்டின் பேரில் கொடுத்த தொகைகள் பெரும்பாலும் இப்பொழுதுள்ள நிலைமையில் அதன் அசலுக்கும் வட்டிக்குமே போதாதிருக்கும் நிலையில் ஆசாமிகள் அவர்களிடம் வெண்ணிலையிற் கொடுத்திருக்கும் பெருந்தொகைகளையும் சேர்த்து நிலத்தைக்கிரயம் வாங்கிக்கொள்ளும்படி கூறுகின்றனர். இதுயோக்கியர்களான இனங்களின் கூற்றாகும். மற்றையோரின் செய்தி கூறவேண்டுவதேயின்று. நிலங்களை நாம் ஒப்புக் கொள்கிறநிலையிலேயே, சட்டுப்பாக்கி வெண்ணிலைப்பாக்கி முதலியவற்றுடன் ஆசாமியிடம் மறுபடியும் ரொக்கமாகப் பெருந்தொகை கொடுக்காவிட்டால் ஒழுங்காய்க்கிரயம்செய்து தருகின்றார்களில்லை. நீதி மன்றங்களுக்குச் சென்றாலும் பைசலாக்க நீண்ட நாட்களும் மிகுந்த அலைச்சலுமேற்படுகிறது.

இத்தகைய நிலையில் பர்மாவில் நம் லேவாதேவி தொழிலுக்கு எத்தகைய கஷ்ட நஷ்டங்களேற்பட்டிருக்கின்றன என்பதைச் சிந்திக்குங்கால் மிகுதியும் துயரமுண்டாகிறது.

---

புருஷன் :—(கோபமாக) இன்னும் சமையல் ஆகவில்லையா? தினந்தோறும் இந்த இழவுதானா? நான் ஹோட்டலுக்குப் போகின்றேன்.

மனைவி :—இன்னும் ஐந்து நிமிஷங்கள் பொறுத்துக்கொள்ளுங்கள்.

புருஷன் :—அதற்குள் சமையல் தயாராகிவிடுமா?

மனைவி :—இல்லை, நானும் தங்களுடன் ஹோட்டலுக்கு வந்துவிடுகின்றேன்.

ஃ ஃ ஃ

மோட்டார் வியாபாரி :— இப்பொழுதுதான் வந்திருக்கும் இந்த "சிக்ஸ் ஸிலிண்டர்" கார் மிகவும் நன்றாக உழைக்கின்றது. எவ்வளவு மேடானாலும் சுலபமாக ஏறும் தன்மைவாய்ந்தது.

வாங்குபவர் :—அப்படியா? சென்ற தடவையில் தங்களிடம் வாங்கிய கார் ஓர் மரத்தின் மீதுகூட ஏறியது.

ஃ ஃ ஃ

முதலாவது நாட்டுப்புரத்தான் :— டே அண்ணே! போலீஸ் காரன் நின்னுக்கின்னு மோட்டார் வண்டிகளோடே கையாட்டுறானே! எதுக்கடா அண்ணே?

இரண்டாவது நாட்டுப்புரத்தான் :—அடே! போடா பட்டிக்காட்டான்! இந்தப்போலீஸ் காரனுங்க நம்மளண்டை ஏதாவது லஞ்சம் வாங்குவான்னு கவுருமெண்டு கையாட்டச் சொல்றாண்டா! வெள்ளைக்காரன் வேலையே வேலைடா.

# விநோதக் கொத்து.



ராமு:--பெண்மக்களை பிரெஞ்ச் கடிகாரங்களுக்கு ஒப்பிடு கின்றீர்களே! அது ஏன்?

சோமு:--பிரெஞ்ச் கடிகாரங்கள் பார்வைக்கு மிகவும் அழ காக விருக்கும். ஆனால் அவைகள் ஓர்முறை கெட்டுப் போனால் மறுபடியும் ரிப்பேர் செய்வது கஷ்டம்.

ஃ ஃ ஃ

மனைவி:--இன்று தினம் எனதுள்ளம் இன்பத்திலாழ்ந்திருக் கின்றது. அன்றியும் தங்கள் முகம் மிகவும் வசிகரமாய்க் காணப் படுகின்றதே! என்னகாரணம்?

கணவன்:-- வேறொன்றுமில்லை. தீபாவளி பண்டிகை சமீ பத்தில் வந்துவிட்டதே யென்று தான்.

ஃ ஃ ஃ

கனபாடிகள்:--நிமிஷத்துக்கு நானூறு வார்த்தைகள் பேசும் மிஷின் ஒன்றை நூதனமாய்க் கண்டுபிடித்திருக்கிறார்களாமே.

சாஸ்திரிகள்:--இதென்ன? ஓர் பிரமாதமா? இதைவிட அருமையான மிஷின் என்னிடமிருக்கின்றது.

கனபாடி:--அப்படியா? அது என்ன?

சாஸ்திரி:--"என் மனைவி".

ஃ ஃ ஃ

தகப்பனார்:--(பரீக்ஷையில் தவறிய தன் குமாரனை நோக்கி) என்னடா? வயது மாத்திரம் ஐந்து கழுதை வயதாகின்றது. கொஞ்சமாவது புத்தி வேண்டாமா? உன்னுடைய வயதில் நம்மள் சீனு எம், ஏ.பாஸ் பண்ணவில்லையா?

பையன்:--ஆம் அப்பா! அவன் உங்கள் வயதில் ஓர் சமஸ் தான திவானாகவில்லையா? உங்களைப்போல் வக்கீல் குமாஸ்தாவாக வாயிருந்தான்?

சினிமாக் கம்பெனி மானேஜர்:—அந்த மூன்று ஸ்டார் (ஆக்டர்)களுக்கும் எவ்வளவு கொடுத்தாய்?

குமாஸ்தா:—(மூன்று நக்ஷத்திர மார்க்குள்ள வத்திப் பெட்டிகள் என நினைத்துகொண்டு) டஜனுக்கு ஆறணக்கொடுத்தேன்.

ஃ ஃ ஃ

ஒருவன்:—அப் பெண்மணி எவ்வளவு அழகாயிருக்கின்றாள் பார்த்தனையா?

மற்றொருவன்:—ஆம். அவள் தன் கூந்தலையும் முகத்தில் பூசியிருக்கும் பவுடரையும் கடையில் வாங்கும் பொழுது நான் அவளருகில்தான் இருந்தேன்.

ஃ ஃ ஃ

அன்பர்:—நண்ப ரே! தங்களுக்குக் கிடைக்கும் சொற்ப சம்பளத்தில் நீங்கள் இவ்வளவு சொத்துக்களையும் நகைகளையும் எப்படி உங்கள் மனைவியின் பேரால் வாங்கினீர்கள்.

நண்பர்:—நான் எனது நண்பர்க்ட்கு ஏதாவது சாதகம் செய்தால் அவர்கள் தங்கள் நன்றியறிதலைக் காட்டுவதற்காக என்னிடம் வருவார்கள். நான் அப்பொழுது என் மேஜையிலுள்ள டிராய்ரைத் திறந்து வைப்பேன். ரூபாய்களையோ அல்லது சவரன்களையோ அவர்கள் என் எதிரிலேயே யெண்ணிப் போட்டு விட்டுப் போய்விடுவார்கள். நான் அவைகளைக் கையாலும் கூடத் தொடுவதில்லை. ஆனால் சில அயோக்கியர்கள் நான் லஞ்சம் வாங்குவதாகக் கூறுகின்றார்களாம்.

ஃ ஃ ஃ

தாயார்:—அடே கிட்டு. ஏண்டா அழுகின்றாய்? உனக்குத்தான் இன்று நிறைய பக்ஷணங் கொடுத்திருக்கின்றேனே?

கிட்டு:—அடுத்த வீட்டு ராமுவுக்கு இரண்டு கையிலேயும் பக்ஷணம் கொடுத்திருக்குராங்க.

தகப்பனார்:—அதற்காக என்னடா?

கிட்டு:—எனக்கும் இரண்டு அம்மா இல்லையே இன்னு அழுகின்றேன்.

# தமிழகமும் வாணிகமும்.

(சுவாமி பரிபூரணனந்தஜி ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை.)

திரைகடல் ஓடியும் திரவியந்தேடென மொழிந்த நம் மூதைப் பிராட்டியைப் பெற்றெடுக்க தமிழகம் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுரையுந் தந்து சிறந்தது. சீத்தலைச் சாத்தனுர் கூலவாணிகஞ் செய்தமைபற்றி அப்பெயர் பெற்ருரென்பர். துறவு மார்க்கம் பூண்ட மணிமேகலையின் வரலாற்றைப் பழய காப்பியம் ஐந்தனுள் ஒன்ருக செய்து தந்த புலவர் பெருமானும் இவரே. மூவாயிரம் ஆண்டுகட்கு முன் சேரநாட்டை யாண்ட சேரலாதன் என்னும் மன்னனுக்கு மகனுய்ப் பிறந்து கல்வி, கேள்விகளிற் சிறந்து துறவு பூண்ட இளங்கோவடிகள், பத்தினிக் கடவுளாகிய கண்ணகியின் வரலாற்றை 'பொருட்டொடர் நிலைச்செய்யுள் செய் தற்கு வேட்கையடையும் வண்ணம்' செய்தவரும் இவரே. அந் 'நெஞ்சை அள்ளும்' சிலப்பதிகாரத்துள் தலைமை நாயகனுய் விளங்கும் கோவலனது தந்தை மாசாத்துவான் என்பாரும் வாணிகத்திற் தலைசிறந்த ஒருவர். இவர் புகார் நகர் நடுவே பயன்தரு மரம் பழுத்தாற் போன்று நல்வழியால் தாம் ஈட்டிய செல்வத்தை வறியார்க்கு வரையாது வழங்கியவர்.

'பெருங்குடிவாணிகன் பெருமடமகளே'னக் கூறியாங்கு ஒப்பற்ற அழகும் உயரிய கற்பும் அமைந்து விளங்கிய கண்ணகியென்னும் இளங்கொடியைப் பெற்றெடுத்த மாநாய்க்கன் என்னும் வணிகரும் தம் வாணிகத்திற் சிறந்து ஏழை மாந்தருக்கு மழை போல் பொருள் ஈந்து பொலிந்து விளங்கினர். இங்ஙனமாக நம் நாட்டில் பண்டொருகால் வாணிகம் மிக உயர்நிலை அடைந்திருந்ததெனச் சிலப்பதிகாரத்துள்ளும் காணப்படுகிறது. பொன்னி யாற்றின் வளப்பத்தினைப் பெற்ற சோழநாட்டின் தலை நகராய புகார் நகரத்திலே காவேரியாறு களிப்பொடு சென்றது.

அக்காவிரிப்பூம்பட்டினத்தில் பெருங்குடி வணிகர் குலத்தில் திருவெண்காடராகிய பட்டினத்தடிகளும் அவதரித்தார். அவரை விரிசடைக் கடவுளாது தோழராகிய குபேரனின் திருவவதாரம்

என்றே புராணங்கள் கூறும்அத்திருவெண்காடர் பட்டினத்துச் செட்டியார் என்ற பெயரைப் பெற்றும், குழந்தை வடிவங்கொண்ட சிவமூர்த்தியை அக்குழந்தை நிறையுள்ள பொன் கொடுத்துப் பெற்றும், அக்குழந்தையிடம் பல திருவிளையாடல்களைக் கண்டும் அப்பிள்ளை கொடுத்த காதற்ற ஊசியும் ஓலையுங் கண்டு துறவு மார்க்கம் பூண்டும், தாய் இறக்க அப்பிணத்தைக்கொண்டு சுடலை கடுகிய சுற்றத்தவரிடமிருந்து விலக்கி வாழைத் தண்டுகளின் மீது வைத்து எரிமூட்டித் தாய்க்கடன் கழித்தும், திருவாரூரில் இறந்த பிள்ளையை எழுப்பியும்; கொங்கு நாட்டில் பிச்சை கேட்ட விடத்தில் அடிபட்டும்; கழுகுமரம் எரித்தும், அக்கழுகுமரமேற்றுவித்த அரசனாகிய பத்திரகிரியாரை ஆட்கொண்டருளியும், அருணகிரி நாதர் அவதரிக்க அருள்புரிந்தும், பின், திருவொற்றியூரை யடைந்து இடைச்சிறுவர்களோடு விளையாடி, விளையாட்டாகத் தம்மைச் சிறுவர்களால் மூடச்செய்து சிவலிங்க உருவமாகி அப் பெருங்குடி வணிகர் குலத்தை உயர்வுபடுத்தியுள்ளார்.

அத்தகைய நகரின் வீதியிலுள்ள கடைத்தெருக்களை

"இருபெருவேந்தர் முனையிடம்போல
இருபாற் பகுதியினிடைநிலமாகிய
கடைகால்யாத்த மிடைமரச்சோலைக்
கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்"

என்று ஆசிரியர் குறிப்பிடுவதாலும், பல பண்டங்களோடு நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, யிறுங்குமுதலிய பதினெண் வனக் கூலமுங் குவித்து விற்கும் கடைத்தெருவின் கண்கவர் காட்சியைக் குறிக்குமிடத்துப் பின்னும் ஆசிரியர்

"வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையும் மேவிய விரையும்
"தூசுந்துகிரும் ஆரமும் அகிலும்
மாசறு முத்தும் மணியும் பொன்னும்
"பால்வகை தெரிந்த பகுதிப்பண்டமொடு
கூல"மும்,

என விளக்கிக் கூறியதாலும், பெருங்குடி வாணிகரது மாண்புற விளங்கும் மாடமாளிகைகளைக் கூறுமிடத்துக் கண்ணுக்கெட்டாத தூரம் விண்ணிலே விளங்கித் தோன்றும் இருப்பிடங்களெனக் கூறியதாலும் பழய காலத்தில் வாணிகம் தலைசிறந்திருந்ததெனத் தெரிகிறது.

கடல் வழியாகவும் கரைவழியாகவும் வாணிக நிமித்தம் வந்து தங்கிய அயல் நாட்டவருடைய இருக்கைகளை ஆசிரியர்

"கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனறவறியா யவனர் இருக்கையும்"

என்றும், அன்னார் தமிழரோடு நீரோடு நீர் கலந்தாற் போன்றிருந்த தன்மையை

"கலந்தருதிருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந்துறையும் இலங்குநீர் வரைப்பும்"

என்றும் வியந்து கூறியுள்ளார்.

தமிழகத்தாரும் அக்காலத்தில் கடல்வழியாயும் தரைவழியாயும் சென்று பண்டமாற்றம் செய்தனர் என்பது சரித்திர உண்மையாகும். மரக்கலத்தால் கடல் கடந்து தூரதேசஞ் சென்று வாணிகம் செய்யும் வழக்கம் மிகப்பழைய காலத்திலேயும் நிலைபெற்றிருந்ததென்பது

"கலத்தினும் காலினும் தருவனர் ஈட்டக்
குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்"

என்க் குறிப்பதனால் நன்கு விளங்குகிறது. துறைமுகங்களில் இக்காலத்திற்போல அக்காலத்திலும் திசை தெரிந்து மரக்கலங்கள் துறைமுகம் வந்து சேரும்படி, "இலங்குநீர் வரைப்பின் கலங்கரை விளக்கமும்" என்றபடி கலங்கரை விளக்கமும் (Light house) அமைக்கப்பட்டிருந்தன. துறைமுகத்தில் பலவகைச் சரக்குகளையும் பிரித்து உணர்த்துதற்பொருட்டுச் சிறு கொடிகள் ஆங்காங்கே நாட்டப்பட்டிருந்தன. இவற்றை விளக்கிய ஆசிரியர்

"கலந்தருதிருவிற் புலம்பெயர் மாக்கள்
வேலைவாலுகத்து விரிதிரைப் பரப்பில்
கூலமருங்கில் கொடி எடுத்து நுவலும்"

என நன்கு கூறியதும் நோக்கத்தக்கது. அக்காலத்தே ஐரோப்பிய நாட்டிற் சிறப்புற்று வாழ்ந்த யவனர் என்னும் கிரேக்கர்கள் வாணிகத்தின் பொருட்டு தமிழ் நாட்டில் வந்து குடியேறி ஒற்றுமையாய் வாழ்ந்தார்கள். அவர்கள் கடலோரத்தே அமைத்திருந்த அழகிய மாளிகைகள் விண்ணிலே விளங்கித் தோன்றின. இங்ஙன

மாக தமிழகத்தில் வாணிகமே முதன்மை பெற்று ஞாலம் முழுவதும் ஒருங்கே திரண்டு வந்தாலும் வழங்கக் குறையாத வளப்பமுடையதாய் விளங்கிற்று. இக்காலத்தில் வாணிகத்தால் செழித்தோங்கியுள்ள ஜப்பான் முதலிய நாடுகள் தலைகாட்டாத அக்காலத்திலேயே நம் நாடு வாணிகத்தில் சிறப்புற்றிருந்தது. இவற்றைப் பல பழந்தமிழ் நூல்களிலுங் கூறியது காணலாம். பட்டினப்பாலையில் வணிகப் பொருள்களைத் தொகுத்துக் கூறுமிடத்து;

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலில் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
இடமலைப்பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கைவாரியும் காவிரிப்பயனும்
ஈழத்துணவும் காழகத்தாக்கமும்"

எனக் காணப்படுகிறது. மேலை நாட்டவர் இங்குவந்து வாணிகம் செய்தனர் என்பதற்குத் தற்போது நிலத்திலிருந்து கண்டெடுக்கப்பட்ட பழய நாணயங்களும் காசுகளும் போதிய சான்றுகளாகும்

தமிழகத்தாரும் அங்ஙனமே வாணிகத்தின் பொருட்டு மரக்கலங்களில் பிறநாடுகள் சென்று தங்கியதால் அமெரிக்கா முதலிய மேலைத் தேசங்களிலுள்ள சில பாகங்களில் இன்னும் தமிழகத்தாருடைய மொழிச் சொற்களும் பிறவும் சிதைந்து காணப்படுகின்றன. அவர்கள் வாணிகத்தின் பொருட்டுப் பிறநாடுகள் போந்தாலும் தங்கள் வழிபடு கடவுளை மறக்கவில்லை. சில நாட்களுக்கு முன்னதாகவுங்கூட சீனதேயத்திலுள்ள ஓர் காட்டின் மத்தியில் செஞ்சடைக் கடவுளது பழய கோவிலொன்றும் தென்பட்டதாகத் தெரியவருகிறது. அத்தகைய வணிகர் கல்வியிலுந் தலைசிறந்து விளங்கினர்.

"அறத்தான் வருவதேயின்பம் மற்றெல்லாம்
புறத்த புகழு மில"

எனவும் நன்கறிந்து கடைப்பிடித்தனர்.

தற்காலம் நகரத்தாரென்று சொல்லப்படுபவரும் செட்டிமார் என்று அழைக்கப்படுபவரும் வணிகர் என்னும் பெருங்குடியாளர் ஆவர். காவிரிப்பூம்பட்டினமே புகார் நகரெனப்படுவது. சத்துருக்கள் வந்து புகாதவாறு உயர்ந்த மதிலுடைய கோட்டைகளைக்

கொண்டுள்ளதால் புகார் நகர் எனப்பட்டது. பல நாட்டு மக்களும் வாணிகத்தின் பொருட்டும் மற்றும் பல சிறப்பின் பொருட்டும் வந்து நெருங்கக் குடிகொண்டுள்ள இடத்தை நகர் என்பர். அந்நகரில் தொன்று தொட்டு வாழ்ந்து வந்தாரே நகரத்தார் என்றழைக்கப்படுவர். அந்நகரத்தார் போன்ற நாட்டுக்கோட்டைச் செட்டிமாரும் சிறப்புப் பெயர் கொண்டனர். நாடு என்பது சோழநாட்டையே குறிக்கும். சோழநாடே மற்றைய நாடுகளிலும் சிறப்புற்றிருந்தது. அது பற்றியே முன்னோர் அந்நாட்டைச் "சோழவள நாடு சோறுடைத்து" என்றும் வியந்தனர்.

அச்சோழநாட்டின், கோட்டையையுடைய காவிரிப்பூம்பட்டினத்தில் பழயகாலந் தொட்டு வசித்து வந்தாரை நாட்டுக்கோட்டைச் செட்டிமார் என்றழைத்தனர். செட்டி என்னும் சொல் மேன்மையுடையோர் என்னும் பொருளைக்கொண்ட 'சிரேஷ்டம்' என்னும் வடமொழிச் சொல்லிலிருந்து திரிபுபெற்ற சொல்லாகும்.

அக்காலத்திய தமிழகத்தார் இக்காலத்திற் போலல்லாது தம் வணிகப் பொருட்களைத் தம் நாட்டிலேயே பயன்படுத்தி நுட்பமான பட்டுப்புடவைகளையும் மற்றும் பருத்திப் புடவைகளையும் விருத்தி செய்திருந்தார்கள் என்பது

"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டும் நுண்வினைக்காருகர் இருக்கையும்"

என்பதாலும்,

"நூலினும் மயிரினும் நுழை நூற்பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூறடுக்கத்து
நறுமடி செறிந்த அறுவை வீதியும்"

என்பதாலும் நன்கு விளங்கக் கிடக்கின்றன.

இதுவரை பண்டை நாட்களில் நம் முன்னோர் இவ்விதம் வணிகத்திற் சிறப்புற்றோங்கியிருந்தனர் என்பதை ஒருவாறு ஆராய்ந்தோம். ஆனல் இப்போது நாம் செய்யவேண்டியதென்ன? நம் முன்னோரின் சிறப்பைப்பற்றிப் பேசிப் பெருமை பாராட்டுவதா? அல்லது நாமும் அவர் நமக்குக் காட்டிய வழியைக் கடைப்பிடித்து நமக்குப் பின்னல் வரப்போகும் சந்ததியார் நம்மைப் பின்பற்றவைப்பதா?

பழய காலத்தில் இருந்த வணிகப் பெரும் மக்களைப் போல இன்னும் நகரத்தார் தரும விஷயங்களில் பெரும் முயற்சியெடுத்

து கொண்டுள்ளார்கள். இவர்கள் ஆலயங்களைப் புதிப்பித்தல், ஏழைகளுக்கு உணவளித்தல் மடங்களைக் கட்டுவித்தல் முதலிய பணிவிடைகளைப் பெரிதும் செய்து வருகிறார்கள். ஆனால் தற்காலம் அவசியம் வேண்டப்படுவது கல்வியே. மேலை நாட்டவரில் நூற்றுக்கு எட்டுப்பேரே கல்வியில்லாதவரெனக் கூறலாம். நம் நாட்டிலோ மேலை நாட்டிலுள்ள கல்லாதார் தொகையிலும் குறைந்தவரே கல்வியறிவுடையார். ஆகவே சுப்பிரமணிய பாரதியார் 'வீதிகள்தோறும் இரண்டொரு பள்ளி' எனக் கூறியபடி ஆங்காங்கு நம் நகரத்தார் இனிமேல் வீதிகள் தோறும் பாடசாலைகளையும் வாசகசாலைகளையும் கட்டித்தந்துதவுவதோடு, பத்திரிகைகளையும் பரவச்செய்து பொது அறிவையும் வளர்ப்பார்களாக. தம் முன்னோராகிய சீத்தலைச் சாத்தனார், பட்டினத்தடிகள், குபேரன் போன்று புலமையும் சீரும் சிறப்பும் பெற்று செழித்தோங்கி ஏழைகளின் கண்களைத் திறப்பார்களாக.

---

சைனாவிலுள்ள இம்பீரியல் கால்வாயின் நீளம் சுமார் 2,100 மைல்களுக்கு மேலிருக்கின்றதாம்.

ஃ ஃ ஃ

தற்போது சென்னை மாகாணத்தில் 83 ஸ்திரமாயுள்ள சினிமாக் காட்சிச் சாலைகளும் 66 சுற்றுப் பிரயாணம் செய்யும் சினிமாக் கம்பெனிகளும் இருக்கின்றன. 83 காட்சிச்சாலைகளில் பதினொன்று சென்னை நகரிலேயே யிருக்கின்றது. அவைகளிலொன்றில் பேசும் படக்காட்சி நடைபெறுகின்றது. சினிமாப் படங்கள் பிடிக்கும் கம்பெனிகள் (சென்னை நகரத்தில்) ஆறு இருக்கின்றன.

ஃ ஃ ஃ

அமெரிக்கா ஐக்கிய மகாணத்திலுள்ள (Acturial Society) என்னும் சங்கத்தாரால் வெளியிடப் பெற்ற அறிக்கையிலிருந்து ஆகாய விமானப் பிரயாணம் ரயில்வே பிரயாணத்தை விட 22 மடங்கு அதிக ஆபத்தாயிருந்தாலும் கூட அங்கே மிகவும் சௌகரிய மாயிருக்கின்றதெனறும் 30,00,00,000 மைல் ரயில்வே பிரயாணத்தில் ஒரு ஆள் மரண மடைகின்றாரென்றும், 12,50,000 மைல் ஆகாய விமானப் பிரயாணத்தில் ஒரு ஆள் மரண மடைகின்றாரென்றும் தெரிய வருகின்றது. 1927-ம் வருடம் ஜனவரியிலிருந்து 1930-ம் வருடம் மார்ச் மாதம் வரையிலும் ஒவ்வொரு ஐயாயிரம் விமானப் பிரயாணிகளில் ஒரு பிரயாணி மாத்திரம் இறந்திருப்பதாக கணக் கெடுத்திருக்கின்றனர்.

---

# தமிழ்நாட்டுப் பலசாலிகள் மகாநாடு.

சென்ற மாதம் 25, 26 தேதிகளில் கீழைச்சிவற்பட்டி அழகாபுரியில் சென்னை சட்டசபை அங்கத்தவர் டாக்டர் தாஜுூடீன் சாயப் பகதூர் அவர்கள் தலைமையின்கீழ் தமிழ்நாட்டுப் பலசாலிகள் மகாநாடு சீரும் சிறப்புடனும் நடைபெற்றது. தமிழ் நாட்டிற்கே, இம்மாதிரியான மகாநாடொன்று நடைபெற்றது புதிதும், முதலாவது தடவையுமாகும்.

இம் மகாநாட்டைத் திறந்து வைத்த ராஜா ஸர் அண்ணாமலை செட்டியாரவர்களின் பேருரை மிகவும் பொருள் செறிந்து நிற்கின்றது. நம் நாட்டின் தற்கால நிலையைப் பற்றியும் மேனாட்டினர் எவ்விதம் தேகப்பயிற்சியை முதன்மையாகக் கருதுகின்றனர் என்பதைப் பற்றியும் உடற்பயிற்சி நம் நாட்டிற்கு எத்துணை இன்றியமையாதது என்பதைப்பற்றியும் ராஜா ஸர் அவர்கள் மிக நன்றாக எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

தலைவர் டாக்டர் தாஜுூடீன் அவர்களின் பேருரையும் ஊன்றி நோக்கத் தகுந்த ஒன்றாகும். மகாநாட்டில் கலந்து கொண்ட பலசாலிகள் தம் திறமையைக் காட்டி பொது ஜனங்களை மகிழச் செய்தது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். மகாநாட்டின் நடவடிக்கைகளில் கலந்துகொண்டவர்களனைவரும், மகாநாட்டினை வெறும் வேடிக்கை ஸ்தலம் என்று கருதாமல் உணர்ச்சியுடன் உடற்பயிற்சி செய்து வருவார்களேயாமாகில், அது ஒன்றே, உடற்பயிற்சி உணர்ச்சியை கைம்மாறு கருதாது பரப்பி வருபவரும், தமிழ் நாட்டிலே முதலாவதாக பலசாலிகள் மகாநாட்டை வெற்றியுடன் நடைபெறச் செய்தவருமாகிய தமிழ் நாட்டுப் பலவான் திரு. லெ. சோமசுந்தரம் அவர்கட்கு தமிழ் நாட்டார் செய்யும் முக்கிய கடமையாகும். உடலினை உறுதிசெய் என்று வீரமுழக்கம் செய்து வெற்றிக் கொடி நாட்டும் சாண்டோ சோமசுந்தரம் அவர்கட்கு நம் பாராட்டுதல் உரியதாகுக.

(ஜீ. ஆ.)

---

# நனந்தலைக் காட்சி.

பஞ்சாப் மாகாணத்தில் 1929-ம் வருஷம் 13,619 திருட்டுகளும் 679 கொலைகளும் நடைபெற்றிருக்கின்றன.

ஃ ஃ ஃ

பெர்லின் நகரிலுள்ள ஓர் வைத்திய நிபுணர், ஒரு நோயாளியின் திரேகத்துக்கு உள்ளிருக்கும் நோயை அறிவதற்கு மிகவும் ஊதா நிறமான விளக்கொன்றைக் கண்டுபிடித்திருக்கின்றார்.

ஃ ஃ ஃ

ஸ்விட்சர்லாண்டில் மாரத் என்ற ஏரியிலுள்ள ஜலம் பத்து வருடங்களுக்கு ஓர் முறை சிவப்பாக மாறுகின்றது. உலகத்திலேயே எந்த ஏரியிலுமில்லாத மருந்து சம்பந்தமான சில கொடிகள் அவ்வேரியில் இருப்பதாகத் தெரியவருகின்றது.

ஃ ஃ ஃ

ஓர் பிரஞ்சு இஞ்ஜினியர் தற்பொழுதுள்ள மோட்டார் ஹாரன்களுக்குப் பதிலாக ஓர் நவீன முறையைக் கண்டுபிடித்திருக்கின்றார். அதாவது டிரைவருக்கு முன்னே மைக்கராபோன் என்னும் கருவியை அமைத்து அவன் பேசுவதை ஒலிபெருக்கும் கருவியின் வழியாக ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்வதாகும்.

ஃ ஃ ஃ

நியூயார்க்கில் கிளவுடு கிளப் (Cloud Club) என்ற பெயருடன் ஓர் கிளப் இருக்கின்றது. பெண் மக்களின் கூட்டுறவையும் சவகாசத்தையும் ஒழிக்கும் பொருட்டே அக்கிளப் நிறுவப்பட்டதாம். ஆனால் மிஸ் ஜாஸ் பைன் ரீலி என்ற ஓர் பெண்மட்டும் அங்கிருக்கின்றாளாம். டெலிபோன் மூலமாக வரும் ஆர்டர்களைப் பதிவு செய்வதும் பதில் சொல்லுவதும் தான் அவளுடைய வேலை. அந்த கிளப் கிறைஸிலர் என்ற கட்டிடத்தின் 68 வது மாடியில் இருக்கின்றது. அந்தக் கிளப்பில் கல்யாணமான பெண்ணையோ, ஒரு தாயையோ, அல்லது காதலியையோ உள்ளே வர அனுமதிக்க மாட்டார்கள்.

திடீரென்று சூரியன் இயற்கைக்கு விரோதமாக மறைந்தால் எட்டு நிமிஷம் பதினெட்டு சக்கண்டுகள் வரை அதைப்பற்றி நமக்கு ஒன்றுமே தெரியாதாம்.

ஃ ஃ ஃ

நியூஸிலாண்டில் டாட்டோரா என்று சொல்லப்படும் பல்லிகள் இருப்பதாகவும் அவைகட்கு மூன்று கண்கள் இருப்பதாகவும் தெரிகின்றது.

ஃ ஃ ஃ

“ஸெண்ட் பெர்னூர்டு” என்ற நாய்தான் உலகத்திலேயே மிகவும் கனமானது. இவ்வினத்தைச் சேர்ந்த நாய்களிலொன்று 212 பவுண்டு கனமுள்ளதாம்.

ஃ ஃ ஃ

எந்த நாட்டிலும், எந்தச் சாமான்களிலும் இப்பொழுது விலையில் வீழ்ச்சியடைந்தது ரப்பர் ஒன்றுதான். 12 ஷில்லிங் 9 பென்சிலிருந்து இப்பொழுது 4 பென்சாகி விட்டது.

ஃ ஃ ஃ

ஜெர்மன் வெள்ளி சுத்தமான வெள்ளியல்ல. அவைகள் செம்பு, துத்தநாகம், நிக்கல் ஆகிய மூன்று உலோகங்களால் செய்யப்பட்டவைகள்.

ஃ ஃ ஃ

உலகத்திலுள்ள எல்லோருக்கும் தண்ணீர் சப்ளை செய்வதானுல் 695 சதுர மைல்கள் அளவுள்ள ஓர் ஏரி வேண்டுமாம். ஆனுல் நைகரா நீர் வீழ்ச்சியின் சக்தியைப் போன்று அத்தண்ணீரை வெளியே விட வேண்டுமானுல் 70,000 நூற்றுண்டுகள் செல்லுமாம்

ஃ ஃ ஃ

பிரெஞ்சு தேசத்திலுள்ள பிரபல விஞ்ஞான சாஸ்திரியும் கல்வெட்டு சாஸ்திர ஆராய்ச்சிக்காரருமான டாக்டர் மார்ஸெல் மாரின் என்பவர் பாக்னுலிஷ்-டியல்-ஆரன் (Bagnoles-del'orne) என்ற ஊரில், உலகம் சிருஷ்டிக்கப்பட்டபொழுது இருக்கக்கூடுமென்ற சில மனிதர்களின் காலடிகளைக் கண்டிருக்கின்றுர். அவைகளை நன்றுய் ஆராயுங்கால் பெரிய காட்டு மிருகங்கட்கும் மனிதர்கட்கும் பெரும் போராட்டம் நடந்திருக்கலாமென அபிப்பிராயப்படுகின்றுர்.

# ராஜாராம் மோகனராய் ஏற்படுத்திய பிரம சமாஜக் கொள்கைகள்.



1. கடவுள் ஒருவரே. அவரே உலகத்தைப்படைத்தவர். அவரே உலகத்தைக் காப்பவர்; அவரே உலகத்துக்கு அருள்பவர். அவர் ஆன்மஸ்வரூபி; அவர் அளவில்லாத ஆற்றலும், அறிவும், அன்பும், நடுவு நிலைமையும், தூய்மையுமுடையவர். அவர் எங்கும் உள்ளவர், என்றும் உள்ளவர். இன்பம் நிறைந்தவர்.

2. மக்கள் உயிர் என்றுமே அழிவில்லாதது; மென்மேலும் அபிவிர்த்தியடைந்துகொண்டே செல்லவல்லது; தன் செய்கைகட் கெல்லாம் தானே கடவுட்கு உத்தரவாதியாயிருப்பது.

3. கடவுளை மெய்யுணர்வாலும் உள்ளன்பாலும் வழிபடல் வேண்டும். கடவுள் வழிபாடு உண்மையான மன அமைதிக்கும் பேரின்பத்திற்கும் இன்றியமையாதது.

4. கடவுளிடத்தே நாம் செய்யத்தகும் உண்மை வழிபாடா வது நாம் அவர்க்கு அன்பு செய்தலும் அவர் நமக்கு உணர்த்திய வாறு ஒழுகி வாழ்தலுமேயாம்.

5. கடவுளைக் குறையிரத்தலும் அவரையே பற்றிக்கிடத்த லும் நம் உயிருக்குயிராய் நம்மோடு அவர் உடனுறைதலை நமக்குள் நாமே உணர்ந்து அனுபவித்தலுமே ஆன்ம வளர்ச்சிக்குரிய சாதனங்களாம்.

6. படைப்புப்பொருள் எதுவுமே கடவுளாகக்கொண்டு வழிபடுதற்குரியதன்று. அம்மட்டோ! மக்களில் குற்றம் ஒரு சிறிதும் இல்லாதவர் ஒருவருமே யிலர்; நூல்களும் அது. ஆத லால் மக்களில் எவரையும் நூலுள் எதனையும் முத்தி பெறுதற் கேற்கும் ஏக சாதனமாகக் கொள்ளலாகாது. ஆனல் யாவர் எது போதிக்கினும் எந்நூல் எதகூறினும் அவற்றிற் காணப்படும் மெய்ப்பொருள்களை தேசபேதம் சமயபேதம் பாராட்டாது மிக்க பக்தி சிரத்தையோடேற்றுக் கொள்ள வேண்டும்.

7. கடவுளிடத்தே செய்யப்படும் பிதுர்பக்தியும் மனிதர்களிடத்தே காட்டப்படும் சகோதரவாஞ்சையும், ஜீவகாருண்யமுமே சற்சமயசாரமாம்.

8. கடவுள் நல்வினைக்கேற்ப இன்பத்தையும் தீவினைக்கேற்பத் துன்பத்தையும் அருள்கின்றார்; துன்பந்தருவது நம்மைச் சீர்திருத்துதற்கு வேண்டப்படும் அம்மாத்திரையேயன்றி வரையறையின்றி நிகழ்வதன்று.

9. ஒருவர் தம் குற்றத்தைத் தமக்குள் தாமே யுணர்ந்து உண்மையாகவே மனம் வருந்தி அக்குற்றத்தை அறவே கைவிட்டொழிதலே அக்குற்றத்திற்கு கழுவாயாம். அறிவினாலும் நற்குணத்தினாலும் தூய்மையினாலும் கடவுளோடு ஒன்றுபடுதலே முத்தியாம் (கழுவாய்—பிராயச்சித்தம்).

ச. இரத்தினம்.

---

பெண்மக்களைப் புறக்கணித்த எந்த தேசமும் புகழ்த்தக்க முன்னேற்றமடைய முடியாது. எனவே நாம் நமது பெண்மக்களைக் கல்வி யறிவுடையவர்களாக்கப் பலமான முயற்சியெடுத்துக் கொள்ளவேண்டும்.

(பனகால் அரசர்.)




திருக்குற்றாலம் அருவியின் காட்சி.

# நுண் கலைகள்.

திருவாளர். அரு. சோமசுந்தரஞ் செட்டியார்.

தனவணிகன் பொறுப்பாளர் வேண்டுகோட்கிசைந்து, அதன் முதலிதழுக்கு, "நுண்கலைகள்" எனும் அரும் பொருள்பற்றி ஒரு கட்டுரை வரையலானேன்.

மக்கள் மனத்தைப் பண்படுத்துவன நுண்கலைகளே (Fine arts) ஆகும். சித்திரம் சிற்பம், செய்யுள், இசை தத்துவஞானம் ஆகியவைகளே நுண்கலைகளாகும். ஐம்புலன்களேயும் நுட்பமாகக் கூர்மைப்படுத்திச் செம்மை செய்வன ஆதலால் இவைகளே அறிஞர்கள் நுண்கலைகள்—இன்பக்கலைகள்—கறிக்கலைகள் என்று போற்றி மகிழ்கின்றனர். இவ்வருங்கலைகளே மனிதனுடைய உள்ளத்திலுள்ள மிருகஸ்வமாகிய முரட்டுக்குணத்தை மாற்றி அருட்குணத்தை—தண்ணளியை உண்டாக்குவன. இவைகளே மனித நாகரீகத்தின் வளர்ச்சியை—அது அடைந்துள்ள உச்சஸ்தானத்தை (The Zenith of Human civilization) விளக்கிக்கொண்டிருப்பன. காட்டில் அலைந்து திரிந்து வாழ்ந்த மக்கள் நாட்டில் பயிர்செய்து துணிநெய்து நிலைத்துக் குடியிருப்பு வாழ்க்கை வாழ ஆரம்பித்து பெருமகிழ்வுடன் அறிவுப்பொழுதும் இன்பப்பொழுதும் போக்கி வாழ்ந்தநிலையில் அழகிய ஓவியங்களும் அறிய காவியங்களும் இன்னிசைகளும் இசைக்கருவிகளும் சிறந்த சிற்பங்களும், "நானார் என் உள்ளமார் ஞானங்களார் என்னை யாரறிவார்" எனும் ஆன்மஞான ஆராய்ச்சியும் தோன்றுவனவாயின. நுண்கலைகளுக்கு நமது தென்னாடு மிகவும் பெயர் பெற்று விளங்குவதாகும்.

மதுரைக் கோயிலின் சிற்பத்திறனையும் பல்வேறு வகைப்பட்ட தனிச் சிற்பப் பொருள்களின் மாண்மையும் என்னென்று புகழ்வது. மதுரைக் கோவிலிலும் பிற பழைய பொது ஸ்தாபனங்களிலும் சித்திரங்கள் செம்மையாக வரையப்பெற்றிருக்கின்றன. சிற்ப சாஸ்திரிகளும், சித்திரவித்வான்களும் முற்காலத்தில் தென்னாட்டில் மிகவும் புகழ்பெற்று விளங்கியிருக்கிறார்கள் என்பதை,

ஒருமுறை தென்னிந்திய ரயில்வேயில் உள்ள முக்கியமான சரித்திர சம்பந்தமான இடங்களைக்கண்டு வருவோர் இனிது உணர்வர். தென்னிந்தியாவானது செய்யுள் வளத்தில் மிகவும் ஓங்கி விளங்குவதாகும். திருவள்ளுவர் திருக்குறள் எனும் ஞானப்பூங்கோயிலும் கம்பன் காவியப் பூங்காவனமும் இளங்கோவடிகள் ஈந்தி இன்சியையும் சேக்கிழார் செஞ்சொன்மாலையும் திருவாதவூரரது திருக்கோவையாரும் பிற நற்றமிழ் காவிதைப் பூங்கொத்துக்களும் என்றும் பொன்றாது தம்மூரின் நாகரீக வளர்ச்சிக்கும் அறிவுப் பண்பிற்கும் எடுத்துக்காட்டாக நின்று இலங்குவனவாகும்.

யாழும் குழலும், முரசும் நாதஸ்வரமும், தேவார திருவாசகம் திருப்புகழ் திருவாய்மொழி, தியாகராஜ சுவாமிகள் கீர்த்தனை இராமலிங்க சுவாமிகள் அருட்பா. வேதநாகயம்பிள்ளை கீர்த்தனை ஆகிய இன்னிசைப்பாக்களும் நமது தென்னாட்டு மக்களின் இசை வளர்ச்சிக்குச் சிறந்த சான்றுகளாகும்.

தாயுமானர், சங்கரர், மெய்கண்டார், இராமாநுஜர் ஆகியவர்களின் தத்துவஞான ஆராய்ச்சிகள் உலகுபுகழும் உயர்கலைகளாகும்.

தென்னாட்டுத் திருக்கோயில்களின் சிற்பச்சித்திர நுட்பங்களையும், கம்பர் திருவள்ளுவர் இளங்கோவடிகள் முதலிய புலவர்களுடைய செய்யுள் ஆற்றலையும் பக்தர்களின் பக்திரஸக் கீர்த்தனங்களின் இசைச்சிறப்பையும், வீணை, புல்லாங்குழல், முழவு, நாதஸ்வரம் ஆகியவற்றின் இன்னிசையையும், தாயுமானர், சங்கரர் மெய்கண்டார் ஆகியவர்களின் தத்துவஞான ஆராய்ச்சியையும் கண்டு கேட்டு உணரும் அந்நியநாட்டவர் நமது தென்னாட்டு மக்களின் கல்வி விளக்கத்தைப் (Culture) போற்றுகிறார். இந்த நுண்கலைகள் தற்காலத்திலும் ஒருவாறு உயர்நிலையிலேயே நமது தென்னாட்டில் விளங்குகின்றன என்பது மிகையாகாது. புதிய சிற்பங்களும் சலவைக்கல் Marble stone) வேலைகளும் சித்திரங்களும், செய்யுட்களும், இசைநலன்களும் கருவிகளும் புலமை சான்ற தக்கோரால் தோற்றுவிக்கப்பெற்று யாவரும் மகிழ்தல் கண்கூடு. தென்னிந்திய நன்மக்களின் நுண்கலைப் பயிற்சியை நினைக்கும்தோறும் நமது உள்ளம் இன்பக்கடலாடுகின்றது. ஆ! ஆ! என்ன இன்பம். என்ன இசை! எத்தகைய இலக்கியங்கள், எத்தனை சித்திரங்களும் சிற்பங்களும் எவ்வளவு உயரிய தத்துவஞான போதனை! இவ்வளவு உயரிய கலைஞான வளர்ச்சிக்குக் காரணமான நமது தென்னாட்டு மக்களின் நாகரீகத்தை எவ்வாறு புகழ்ந்து மகிழ்வது.

மக்கள் துன்பத்தைத் துடைத்துச் சோர்வைப்போக்கி அவர்களை இன்ப வெள்ளத்தில் இணைக்கச்செய்வது நுண்கலைகளேயாகும். இதனாலேயே பலவித பாடல்களும் கருவிகளும் சித்திரங்களும் சிற்பங்களும் தத்துவஞான ஆராய்ச்சியும் தோன்றுவனவாயின. இவை இல்லாத நாடு பாலைவனமேயாகும். இவற்றைப் பெறாத மக்கள் நாகரீகமடையாத காட்டுமிராண்டிகளே யாவர். நமது இந்து தேசத்தில் உலகுபுகழும் உத்தம கவியாகிய ரவீந்தரநாத் தாகூரும் கவியரசியும் இந்திய கோகிலமுமாகிய சரோஜனி தேவியும் பாரதியாரும் தற்காலக் கலைஞான வளர்ச்சிக்குச் சான்றுகளாவர். பிற புலவர்களும் அறிஞர்களும் பலர் உளர். அவர்களை நாம் நேரில் பார்த்து மகிழ்கின்றோம்.

நுண்கலைகளே உள்ளக்கலை விளக்கத்திற்கு(Heart Culture) ஹேதுவாக விருப்பன. வெறும் அறிவுமட்டும் மக்கள் முன்னேற்றத்திற்குப் போதாது. புலன் அறிவும், அதற்கு மேம்பட்டதாக விளங்கும் உள உணர்ச்சியும், உள உணர்ச்சியினால் உண்டாகும் உண்மை ஒழுக்கமும் மிகவும் இன்றியமையாதனவாகும். சன்மார்க்க வாழ்வையும் இன்பவாழ்வையும் ஒருங்கே ஊட்டி ஒழுங்குபெற அழகாக நல் உணர்ச்சி நல்குவதே உயர்ந்த நுண்கலைப் பயிற்சியாகும். சிறுமை உணர்ச்சிகளையும் துன்மார்க்கத் தூண்டுதலையும் தோற்றுவிப்பதற்குக் காரணமாக இருப்பது உயர்வுடைய பயிற்சியாகாது நுண்கலைப் பயிற்சியாளர் தாழ்ந்த முறையை மேற்கொள்ளுவதே சிறப்புடையதாகும்.

மக்களை நல்வழிப்படுத்துதற்கே ஆன்றோர் நுண்கலைகளைப் பயன்படுத்துவாராயினர். இதனாலேயே தெய்வ வழிபாட்டிலும், அறிவுப் பயிற்சிக்கழகங்களிலும், மங்கலநாட்களிலும் வீடுகளிலும் இந்நுண்கலைகளைப் பயில்வராயினர். மனிதன் அழகும் இன்பமும் விரும்பும் உயர்ந்ததன்மைவாய்ந்த பகுத்தறிவு உணர்ச்சியுடையவனாதலால் அவனுக்கு நல்லுணர்ச்சிகளை நல்குதற்கு நுண்கலைகள் தேவையாகின்றன. உடல் வளர்ச்சிக்கு உணவு இன்றியமையாததாக இருத்தல்போல் உள்ள வளர்ச்சிக்கு அறிய உணர்ச்சிகள் பெரிதும் அவசியம் வேண்டற்பாலனவாக இருக்கின்றன. உணவில்லாதபோது ஒருவன் பசியால் வருந்துவதுபோலவே அறிஞர் தம் உளத்திற்குக் கலைஞானவிருந்து இன்றேல் மிகவும் வருந்துவர். உணர்ச்சியினாலே உளம் பண்படுமாதலால், அவ்வுணர்ச்சியை ஊட்டும் நுண்கலைகளே உயிர்களின் உளவமுதம் என்று இயம்பலாம். எவ்வகை உயிரும் நுண்கலைகளில் ஈடுபடுதலை நாம் நோக்குகின்றோம். பசு, ஆயன் புல்லாங்குழலைக் கேட்டுக் கட்டுப்பட்டுத் தொடர்கின்றது. ஒன்றிற்கும் கட்டுப்படாத குழந்தையின் மனம் தாயின் தாலாட்டினைக்கேட்டு ஒருமைப்பட்டு உறங்கு

கின்றது. கொடிய பாம்பும் குறவனது மகுடியைக் கேட்டுத் தலையெடுத்து ஆடுகின்றது. ஆயிரக்கணக்கான மக்களுடைய மனம் ஏககாலத்தில் ஒரு கலைஞானின் கானத்தினால் கட்டுப்படுத்தப் பெறுகின்றது. இக்கருத்தைப் பின்வரும் வடமொழித் தொடர்கள் இனிது விளக்கும்.

"பசுர் வேத்திசிசுர் வேத்தி வேத்தி கானரஸம் பணி" நுண் கலைகளிலே மக்கள் மனம் ஈடுபட்டு உருகின்றது. தன்னை மறந்த இன்பத்தை நல்குவன நுண்கலைகளேயாகும். மக்கள் தமது வேலைகளை எல்லாம் மறந்து இன்னிசையில் ஈடுபட்டிருப்பதையும், காவியப் பூங்காவனங்களில் திளைத்திருப்பதையும் நாம் இனிது உணருகின்றோம். இதுபோழ்து மாணிக்கவாசக சுவாமிகள் செய்தருளிய திருக்கோவையாரில் உள்ள செய்யுள் ஒன்று நினைவுக்கு வருகின்றது. தோழன் தலைவனை பார்த்து, "ஐயனே நீர் ஏன் இவ்வாறு உடல் இளைத்துச் சோர்வுற்றிருக்கின்றீர்? மதுரையில் இறைவன் ஆய்ந்தருளிய இனிய தமிழின் அகப்பொருள் சுவையில் ஆழ்ந்து உருகலானீரா? அல்லது சங்கீதசாகரத்தில் திளைத்து உருகலானிரா? காரணம் யாது? கூறுவீராக! என்று தமிழ் இலக்கியச் சிறப்பையும் இசைச் சிறப்பையும், உணர்ச்சியால் உடல் உளம் உயிர் யாவும் உருகும் என்பதையும் எடுத்துக்காட்டுகின்றான் அவ்வின்பப்பாடல் வருமாறு:—

இறைவான் புனற்றில் லைச்சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும், உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்டீந்த மிதின் துறைவாய் நுழைந்தனையோ அன்றி ஏழிசைச் சூழல்புக்கோ, குறைவாத: வரைத்தோட்கு என் கொலாம் புகுந்து எய்தியதே.



# ஸர். விசுவேச்வரய்யாவின் பேருரை.

அண்ணாமலை சர்வ கலாசாலை ஸ்தாபகர் தினக்கொண்டாட்டத்தின் போழ்து தலைமை தாங்கிய

( ஸர். விசுவேச்வரய்யா அவர்களின் சோற்போழிவு. )

ஒரு ஸர்வ கலாசாலையைத் தனி மனிதர் ஒருவர் ஸ்தாபிப்பதென்றால் எந்த தேசத்திலும் அது ஒரு விசேஷ கைங்கரியமாகவே கருதப்படும். இந்தியாவில் தர்மம் செய்வோர் பரம்பரையான பல மார்க்கங்களில் செய்து வருவதால் இத்தகைய ஸர்வ கலாசாலை தர்மம் இரட்டிப்பு விசேஷமாகும். எனவே இந்த ஸர்வ கலாசாலை ஸ்தாபகரின் பரோபகார ஊழியத்தைப் பாராட்டும் நிமித்தமே இன்று இக்கொண்டாட்டத்தை ஸர்வ கலாசாலை அதிகாரிகளும் மாணவர்களும் பொது ஜனங்களும் நடத்துவதாக நான் கருதுகிறேன். ராஜா ஸர். அண்ணாமலை செட்டியாருக்குத் தென்னிந்தியா வாசிகள் பெரிதும் கடமைப்பாடு உள்ளவர்கள்.

அண்ணாமலை ஸர்வ கலாசாலை வெறும் பரிட்சா சபையன்று உண்மையில் போதிக்கும் சாலையுமாகும் ஆசிரியர் மாணுக்கர்களுக்குள் நெருங்கிய சம்பந்தம் இங்கு ஏற்படக்கூடியது குருகுல வாசத்துடன்கூடிய ஸர்வகலா சாலைகளே தேவை யென்று ஸர்வகலாசாலைக் கமிஷன் சொன்னபடி இச் சர்வ கலாசாலை அமைந்திருப்பது சிலாகிக்கத்தக்கதே தமிழ் ஸம்ஸ்கிருதங்களை போதிப்பதன் மூலம் ஆரிய திராவிட கலைகளை விருத்தி செய்யவும் இச்சர்வகலாசாலை வகை செய்திருக்கிறது. இது தேசாபிமானத்தால் தூண்டப்பட்டதாகும் ஸர்வ கலாசாலை வாழ்வுக்கு வேண்டிய இதர அம்சங்களையும் இச்சர்வகலாசாலை புறக்கணிக்கவில்லை ஒவ்வொரு மானவரும் படித்துத் தேர்ந்து ஜீவனத்துக்கு வகை தேடவும் நாட்டின் வருமானத்தைப் பெருக்கவும் லாயக்கானபடி செய்வதே சர்வகலாசாலைகளின் பிரதான நோக்கமாயிருக்கவேண்டும் பிரதானமில்லாத அம்சங்களில் அதிக கவனம் செலுத்துவது நமது நாட்டின் இந்த நெருக்கடியான சமயத்தில் பணத்தை விரயமாக்குவதாகும். விரயம் செய்ய நம்மிடத்தில் பணமுமில்லை இதர கல்வியின் மதிப்புக் குறைந்து போய்விட்டதை உத்தேசித்து பொருளாதாரம் கைத்தொழில் முதலிய துறைகளில் இச்சர்வ கலாசாலை அதிகாரிகள் அதிக கவனம் செலுத்தினுல் மிக்க நன்மை ஏற்படும்.

ஜன சமூகத்திற்கு எது முக்கியமாக இப்போது தேவை யென்பதே பிரதானமாகக் கவனிக்கவேண்டும். அனுவசியமாக பட்டதாரிகளை பெருக்குவதில் என்ன பிரயோஜனம் சுய ஆக்ஷிபெற்ற இதர நாடுகளில் இம்மாதிரி

நடக்கவில்லை. ஜெப்பானில் நான் தெரிந்து கொண்ட வரையில் ஏதாவது ஒரு தொழிலுக்கு ஒவ்வொருவரையும் பழக்குவதுதான் அங்கு முக்கிய வேலையாகக் கருதப்படுகிறது. பொருளாதார சாஸ்திரத்துக்கு அதிக முக்யத்துவம் ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவில் வர்த்தக கைத்தொழில் கல்வி அலட்சியம் செய்யப்பட்டிருக்கிறது. சாஸ்திர ஞானம் அன்னிய நாட்டு அனுபவம் ஆகியவற்றை நாம் தக்கபடி உபயோகிப்பதில்லை. மோட்டார்களும் விமானங்களும் ரேடியோக்களும் மற்றும் தேவைகளையும் இங்கு நாமே ஏன் செய்யக்கூடாது? யாரும் சிரத்தை கொள்வதில்லை; யாரும் பிரயத்தினம் செய்வதில்லை. பிரயத்தனம் செய்தாலும் ஊக்கமளிப்போர் இல்லை. சாஸ்திர ஞானத்தைக் கைத்தொழிலபிவிருத்தியில் செலுத்தி, கைத்தொழில் வாழ்வைப் பிராதான்யமாக்குவதுதான் இப்போது முக்கிய வேலை அதற்கு வேண்டிய உபகரணங்கள், கருவிகள், ஓர்க்சாப்புகளை ஸர்வ கலாசாலை ஏற்படுத்தவேண்டும். தற்கால நாகரீகத்துக்கு அடிப்படை கைத்தொழில்கள் தான். பாங்கி, நாணயச் செலாவணி, இன்ஷூரன்ஸ் முதலிய வர்த்தகக் கல்வி வசதிகளும் விசேஷமாக ஏற்படவேண்டும். பாங்கித்தொழில் செய்யும் நகரத்தாருக்கும் கூட சாஸ்திர ரீதியில் வர்த்தகப்படிப்பு போதித்தால் அதிக நன்மையேற்படும்.

நமக்கு வேண்டிய ஆள்பலம் இருக்கிறது. ஆனால் அதைத் தக்கபடி உபயோகிக்கத் தெரியவில்லை. சரியான கல்வி போதித்தால் மேனாடுகளைப் போல் நாமும் முன்னுக்கு வந்துவிடலாம். அமெரிக்காவும் ஜெப்பானும் உதாரணமாகக் கொள்ளப்படலாம். இசசர்வசாலை பெரிய வித்தியா ஸ்தலமாகி எல்லாருடைய ஆதரவையும் பெற்று நன்னிலைக்கு வருமாக.



# இளைஞர்களுக்கு உபதேசம்.



ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் அரைமணிநேர வீதமாவது மனதை ஓர் நிலையில் அடக்கித் தியானம் செய்வதில் தவறலாகாது. அவ்வாறு தியானம் செய்வதால் மனோபலமும், நற்சிந்தனையும் அதிகரிக்க வேண்டுமாயின் தெய்விகம் பொருந்திய பரிசுத்த குணங்களைப் பெறவேண்டும். காரியங்களுக்குக் காரணமாக செய்கைக்கு மூலாதாரம் சிந்தனையேயாகும். ஆகவே சிந்தனையைப் பரிசுத்தப்படுத்தி தெய்விகம் வாய்ந்ததாக மனோபலத்தினால் செய்து விடுவோமாயின் பிறகு நமது காரியங்களனைத்தும் குற்றமற்ற தூய்மை யுடையனவாகவே இருக்கும். இதற்குத் தியானம் இன்றியமையாததாகும்.

மனம் வாக்கு காயங்களாலும் உயர்வான வற்றையே சிந்தித்தும், சொல்லியும் செய்தும் வரவேண்டும். உங்கள் நோக்கங்களெல்லாம் மிகச் சிறந்தவைகளாகவும். இறைவனால் பாராட்டப்படக்கூடியவைகளாயும் இருத்தல் வேண்டும். வாழக்கையில் முன்னேற்றத்தையடையாமல் பின்னடையலாகாது. முன்னேற்றத்துக்குப் பெரும் முட்டுக்கட்டையாயுள்ள சோம்பேறித்தனத்தை அறவே அகற்றவேண்டும். பேராசையையும் அளவு கடந்த ஆவலையும் ஒழிக்கவேண்டும். அமைதியாயும் சாந்தமாயும் ஆனால் சுறுசுறுப்பாயும் வாழ்க்கையை நடத்த முயலவேண்டும் முட்டாள்தனமாகவோ குருட்டுத்தனமாகவோ எதையும் செய்துவிடாமல் ' எண்ணித்துணிக கருமம் ' என்பதுபோல் தீர ஆராந்தறிந்து காரியத்தில் இறங்க வேண்டும். துன்பத்தையும், துயரத்தையும் கூடப் பொறுமையுடன் இன்பத்தையும் இலாபத்தையும் ஏற்பதேபோல் முகமலர்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளவேண்டும். இவ்வுலக வாழ்க்கை இன்ப துன்பங்களைச் சமமாகக்கொண்டது. ஆதலின் இன்பங்களைமட்டுமே அனுபவிக்கப் பிரியப்பட்டு அதற்காகத் தேடி அலைவதும், கஷ்டத்தை ஏற்கத் தவிர்ப்பதும் தவறான அபிப்பிராயமாகும். ஒரு பெரும் ஆரண்யத்தைச் சுற்றி வருவதாகப் புறப்பட்ட ஒரு வீரன் அதில் ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங்களைச் சிறிதும் பொருட்படுத்தாமல் தன் நோக்கத்திலேயே கவலையாக முன்னோக்கிச் செல்வதேபோல் இவ்வுலக வாழ்க்கையிலும் நீங்கள் உங்கள் நோக்கத்தைச் சாதிக்க முயலவேண்டுமேயன்றி இடையில் ஏற்படக்கூடிய இன்ப துன்பங்களைக்கண்டு மயங்கலாகாது. உண்மையான ஒரு அரசனைப்போல் வாழ முயல வேண்டும். மனிதன் தன்னுடைய ஆசைகளுக்கு அடிமையாக இருக்கின்றான், நம்மைத் தாழ்த்துவதும் உயர்த்துவதும் நமது ஆசைதான்.

ஆசை குறையக் குறைய நமது பந்தங்கள் குறைகின்றன. ஆசையை ஒழிக்கும்போது பந்தமும அறுபட்டு மனிதன் ' நாமார்க்குங் குடியல்லோம் ' என்பதுபோல் சுதந்தர புருஷனாகின்றான். எதற்கும் அடிமைப்படாத ஒருவன் தான் உண்மையான சுதந்தரமுள்ளவனாவான். ஆசைகளுக்கும் தேவைகளுக்கும் அடிமைப்பட்டால் மனிதன் நாளுக்கு நாள்

தாழ்வான நிலைமையைத்தான் அடைவான். எல்லாம் வல்ல பரம்பொரு ளாகிய கருணாநிதிக்குச் சேவை செய்யவும்; அவனுடன் வாழவும், அவனை துதிக்கவும் விரும்புவர் பெரியோர் எத்தகைய பலவீனத்துக்கும், ஆசைக்கும் அஞ்சாமல் சுதந்தரத்துடன் இருக்கும் ஒருவன் தன் வாழ்க்கையில் எல்லாவகைச் சிறப்புகளையும் பெறுவதோடு பிறருடைய வாழ்க்கைகளிலும் இன்பங்களைத்தோன்றச் செய்கின்றான். அப்படிப்பட்ட உத்தமன் தனக்கும் உலகத்துக்கும் அதிகம் பயன்படக்கூடியவனாகின்றான்.

நம்மை நாம் அறிந்துகொள்வதால் மட்டுமே மேற்கூறிய காரியங்களைச் சாதிக்கமுடியும். காலை மாலைகளில் தியானம் செய்யும்போது எல்லாம் வல்ல இறைவனுன் குணாதிசயங்களையும் புகழ்ந்து அத்தகைய குணாதிசயங்களைப் பின்பற்ற முயற்சிப்பதோடு, நம்மிடத்திலுள்ள குற்றங்குறைகளையும் அறிந்துகொண்டு அவற்றை நிவர்த்தித்துக்கொள்ள அரும்பாடுபடவேண்டும். தியானகாலத்தில் இறைவன் சன்னிதானத்தில் நின்று குறைகளை மன்னிக்கும்படி மன்றாடிப் பிரார்த்தனை புரிந்து உயரிய குணங்களைத் தரும்படி இறைஞ்சவேண்டும். மனச்சாட்சியை மதித்துக் குற்றங்களைக் களைவதனால் மட்டுமே மனிதன் நாளடைவில் ஒழுக்கத்தில் முன்னேறலாம். ஒழுக்கத்தை உயிரினும் அதிகமாக ஓம்பவேண்டும். 'ஒரு மனிதன் தன் அனுபவத்தாலேயே அறிவாளியாக வேண்டும்' என்பது ஆன்றோர்வாக்கு. (சல்ட்ரன்ஸ் நியூஸ்.)



## இன்பம்.

எங்கு நோக்கினும் இன்பம் நல்லின்பம்
என்னைச் சுற்றிலும் இன்பம் நல்லின்பம்
தங்குகின்ற இவ்வையகம் இன்பம்
தருக்களும் மலர்ச் சுனைகளும் இன்பம்
பொங்குகின்ற கடல், மலை, யாறு,
பொன்னிறந்த பரிதியும் இன்பம்
திங்களும் கரு வானமும் இன்பம்—(இந்த)
ஜீவ வாழ்க்கையும் இன்பம் நல்லின்பம். (1)

மழலை பேசுங் குழந்தை நல்லின்பம்
மனிதர் இன்பம், மாதர்கள் இன்பம்
அழகு வாய்ந்திடு புள்ளினம் இன்பம்
ஆவினங்கள் இன்பம், நல்லின்பம்
ஒழுகுகின்ற பேர் அருவி நல்லின்பம்
உதயத் தாமரைப் பூவும் நல்லின்பம்
தொழுது போற்றிடும் கோயில் நல்லின்பம்,
ஜோதி வானவன் இன்பம் நல் இன்பம். (2)

# பெத்தாச்சி வள்ளல்.



இவ்விதழின் முகப்பில் காலஞ்சென்ற ஆண்டிப்பட்டி ஜமீன்தார் கானாடுகாத்தான் சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்களின் படமொன்று இணைக்கப்பெற்றிருக்கின்றது. நமது தனவணிக நன்மக்களில் புலவர் பாடும் புகழ்பெற்றவரும் பெத்தாச்சி வள்ளல் என்று தமிழ்நாடு முழுதும் வியந்து பாராட்டப் பெற்ற வருமான திரு. செட்டியாரவர்களின் படம் யாவர் கண்ணையும் மனத்தையும் ஒருங்கே கவரத்தக்கதேயாகும். தமிழ் மொழிக்கும் தமிழ்ப் புலவர்களுக்கும், கல்வி வளர்ச்சிக்கும் கல்வி பயிலும் மாணவர்கட்கும் தந்தையும் தாயுமாக விளங்கி ஆதரவளித்தவரும், வரையாது தம் பொருளிற் பெரும்பாகத்தைத் தருமம் புரிந்த வள்ளலும் ஆகிய அன்பர் பெத்தாச்சி செட்டியார் அவர்களை தனவணிகர் நாடும் தமிழ்நாடும் எந்நாளும் மறக்க முடியாது. திரு. செட்டியாரவர்களால் தழைத்தோங்கிய சங்கங்களும் கலாசாலைகளும் நூல் வெளியீடுகளும் பல. பன்னூற்றிரட்டு அவர்களாலேயே வெளிவந்தது. மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கும், கரந்தை தமிழ்ச்சங்கத்திற்கும் திரு. செட்டியாரவர்கள் பேருதவி புரிந்திருக்கின்றார்கள். திரிசிரபுரம் தேசியக்கல்லூரி, சென்னை இராமகிருஷ்ண மாணவரில்லம், ஆகியவைகளுக்கு மிகவும் உதவியுள்ளார்கள். கொடையும் புகழுமே அவரது வாழ்க்கையின் இரு விழிகளாக விளங்கின என்பது மிகையாகாது.

அவரை நினைக்கும்பொழுதெல்லாம் அவர் தமிழுக்கும் புலவர்களுக்கும் மாணவர்களுக்கும் செய்த அரிய உதவியே நினைவுக்கு வருகின்றது. கானாடுகாத்தானில் தோன்றிய திரு. பெத்தாச்சி வள்ளலின் புகழ் தென்னூரில் வளர்ந்து தென்னாடு முழுவதும் திகழுகின்றது. பெத்தாச்சி என்னும் புகழ் மலரில் எப்பொழுதும் தண்டமிழ்த் தேனீக்களும் கலைவண்டுகளுமே சூழ்ந்து ரீங்காரம் செய்துகொண்டிருக்கும். பழந்தமிழ் வள்ளல்களைப்போல் இவரும் ஓர் தற்காலத் தமிழ்வள்ளல் என்றே புலவராற் போற்றப் பெற்றார். கலைஞான இன்பந்துய்த்தலில் திரு. செட்டியார் மகா ரஸிகராய் நிகரற்று விளங்கினமையே அவர் கலைவளர்ச்சிக்கு

ஆதரவு அளித்ததற்குக் காரணம். என்றும் இன்பம் பெருகும் இயல்புடன் வாழும் பேறு பெற்றவர் பெத்தாச்சி வள்ளலே யாவார். பெத்தாச்சிவள்ளல் புகழ் பெருகுக.

வெண்பா.

போற்றுந் தமிழ்ப்புலவர் பூதலத்தில் வாழவெனச்
சாற்று மருளுருவாத் தானுதித்த—வேற்றமிகு
பெத்தாச்சி வள்ளல் பெரும்புகழைப் போர்த்தன்றே
வித்தா ரணிசிறந்த திங்கு.

போதத் தமிழ்வளர்க்கப் பூதலத்தி லேபிறந்த
சீதக் கலைமதிநேர் செம்முகத்தான்—ஏதமிலா
ஆண்டிப்பட் டிக்கரசா யாளுமுயர் பெத்தாச்சி
நீண்டுலகில் வாழி நிலைத்து.

அ. சுந்தரநாதன்.



# முக்கிய அறிவிப்பு.

நமது "தனவணிகனை" ஐப்பசி மாதத்தில் வெளியிட வேண்டுமென்னும் நோக்கத்தோடு, முதற் பக்கத்தில் தனவணிகன் ஐப்பசித் திங்களில் வெளி வருவானெனக் குறிப்பிட்டிருந்தோம். ஆனால் எதிர்பாராத சில அசௌகரியங்களால் கார்த்திகை மாதத்தில் தான் வெளியிட முடிந்தது. எனவே ஐப்பசித்திங்கள் என்பதை கார்த்திகைத் திங்கள் என திருத்திக்கொள்ளும்படி வேண்டுகின்றோம்.

மானேஜர்.



# இலக்கியப் பூங்காவனம்.

## ஓர் கவிமலர்.

---

(பி. ஸ்ரீ ஆச்சாரியார் அவர்கள் எழுதியது.)

ஒரு காலத்தில் ஒரு பிரபு இருந்தான். அவன் பொருட் செல்வத்தோடு செவிச் செல்வமும் படைத்த இரசிகசிகாமணியாகத் திகழ்ந்தான். அவனது உள்ளம் எப்பொழுதும் அழகுக் கலைகளையும் அறிவுக்கலைகளையும் தழுவி வளர்ந்தது. பண்டைத் தமிழகத்தில் தமிழராது பெருவாழ்விலே பூத்துச் செழித்த இலக்கிய நறுமலர்கள் அவனது வாழ்க்கையினை நீங்காது சூழ்ந்து பரிமளித்துக்கொண்டிருந்தன. அவனது வள்ளன்மை உத்தமக் கவிஞர்க்கும் கலைஞர்க்கும் ஒருங்கே ஓர் ஊன்று கோலாக அமைந்தது.

இப்பிரபு சில காலமாக புதியதோர் நல்ல பாடலைக் கேட்டு மகிழ வேண்டுமென்று பேராவல் கொண்டிருந்தான். ஆனால் கவிதை பெரும் பொருளாலும் ஆக்கப் படுவதன்று என்பதை அவன் அறிவான். நற்கவிதைக்கு அலந்துபோன அவனது உள்ளத்தில் ஒரு புதிய ஆலோசனை பிறந்தது. அவன் தன் ஆஸ்தான மண்டபத்தில் ஓர் பொற்கிழி (A gold Purse) தூக்கி அதனைத் தன் உள்ளத்திற்கு இன்னமுதமாகும் ஓர் அருங்கவிபாடும் புலவருக்கு விருந்தளிப்பதாக நாடெங்கும் அறிவித்தான்.

பிரபு ரஸிகனாக இருந்ததால் அவன் அப்பொற்கிழியை அழகுபெற அமைந்துள்ள இலக்ஷ்மி தேவியைக் குறிக்கும் சிலையொன்றின் கரத்தில் திகழுமாறு செய்து சபா மண்டபத்தில் வைத்தான். இலக்ஷ்மிதேவி ஓர் உயிர் ஓவியமாகச் சித்திரிக்கப் பெற்றிருந்தாள். பொய்கை யொன்றில் புதிதாக மலர்ந்ததோர் செந்தாமரை மலரில் செம்மாந்து வீற்றிருப்பதாக அத்தேவி அமைக்கப்பெற்றிருந்தாள். சிறிது தூரத்தே இருந்து நோக்குவோர், மண்டபத்தின் ஒரு பகுதியில் எதார்த்தமாகவே ஓர் பொய்கையிருப்பதாகவும் அலையெறிந்துகொண்டிருக்கும் அந்நீர்ப்

பரப்பிலே ஓர் செந்தாமரை மலர்தளைய வீழ்ந்து மலர்ந்திருப்பதாகவும் அம்மலரின்மீது அழகுத் தெய்வத்தின் ஆனந்தரூபம் அரசிருந்து பொற்கிழியும் கையுமாகத் தகுதிவாய்ந்த மேதாவியொருவனை எதிர்நோக்குவதாகவும் கருதி மயங்குவாராயினர்.

இத்தகைய தெய்வச் சிலையின் திருக்கரத்தினின்றும் பொற்கிழியை பெறவேண்டும் என்னும் பேரவா பிடர்பிடித்துந்த எண்ணிலாத கவிப் புலவர்கள் பிரபுவின் சபா மண்டபத்திற்கு வந்து சேர்ந்தனர். பிரபுவும் அவனது ஆஸ்தான வித்வான்களும் அப்புலவர்களை உபசரித்து அவரது பாடல்களை ஆவலோடு கேட்பார்கள். ஆனால் அப்பாடல்களில் ஒன்றும் அவர்களது உள்ளத்திற்கு ஆறுதல் அளிக்கவில்லை. எல்லாம் வெறுஞ் சொற்றொடர்கள்! மோனைகள்! பிராசங்கள் இச்சொல்லடுக்குகளின் குப்பைகளிலே ஓர் உண்மை மணியேனும் காணப்பெறவில்லையே யென்று பிரபு பெருமூச்செறிவது வழக்கம். எனவே வந்த புலவர்களெல்லாம் விதியை நொந்துகொண்டு வீடு செல்வாராயினர்.

இவ்வாறு இருக்கையில், ஒருநாள் ஆண்டிலும் அறிவிலும் ஒருங்கே பழுத்த பெருங்கிழவி — ஞானச்செல்வி — கலைத்தாய் ஔவைப்பிராட்டி அச்சபைக்கண் திடீரென்று தோன்றினள். இக்கிழவி எவ்வாறு பொற்கிழி பெறுதல்கூடும் என்று ஆஸ்தானப் புலவர்களெல்லாம் இரங்கித் தம்முள் உரையாடப்பெற்றூர். பிரபு மாத்திரம் உருவினைக்கண்டு இகழாது அந்நரை மூதாட்டியை விரைந்தேற்று உபசரித்து, வந்தகாரியம் என்ன' என்று வினவினன். அப்பொழுது ஔவை பிரபுவின் அகக்கருத்தினை நன்குணர்ந்துகொண்டு இலமிக்ஷ்மிதேவியின் மலர்க் கரத்தில் திகழும் பொற்கிழியினையும், அத்திருமகளையும் நோக்கிப் பின்வரும் வெண்பாவை உருக்கமான குரலில் பாடினள். அது வருமாறு:—

"ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன் றும்புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர் பூத்தமலர்த்
தண்டா மரைத் திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயின் உண்டென் றறு"

ஔவையெனும் அருட்கொடியில் பூத்த இக்கவிமலரின் மணமும் ஒளியும் பிரபுவின் உள்ளத்தையும் அங்கு குழுமியிருந்த புல

வர்களின் உள்ளத்தையும் ஒருங்கே வசீகரித்தன. பிரபுவும் மனமுவந்து பொற்கிழியை ஔவையாருக்கே அளித்தான்.

அன்பர்களே! இக்கவிமலரின் மாட்சி உங்கட்கு இனிது புலனாகலாம். நூற்றில் ஒருவரே அறிஞர் பேசும் அவைக்களத்தே செல்லுதற்குரியராவர். அவ்வாறு செல்பவருள் புலமைப் பெருக்கோடு விஷயங்களை உயத்துணர்வோர் ஆயிரத்தொருவரே யாவர். அப்புலவருள்ளும் வார்த்தையின் நயமுணர்ந்து வசனிப்போர் பதினாயிரத்தொருவரே! இவ்வாறு சில அரிய உண்மைகளை வெளியிட்டுவந்த ஔவையார், திடீரென்று பிரபுவை விளித்துப் பேசாது "பூத்தமலர்த் தண்டாமரைத் திருவே" என்று இலக்ஷ்மி தேவியை விளித்துப் பேசத்தொடங்கி முடிவாகத் தாம் கண்டு கொண்ட உண்மையினை வெளியிடப்புகுந்து, 'தாதா கோடிக் கொருவர்' என்று ரஸிகமணியான பிரபுவின் பெருவள்ளன்மையினைச் சிறப்பித்துப் பேசுகின்றாள். இவ்வாறு தாம் வெளியிட்ட உண்மைக்கும் பொன்னரசியாகிய லெக்ஷ்மியையே சாக்ஷியாக்கி உண்டாயின் உண்டென்றறு என்று பொற்கிழியை நோக்கிக் குழந்தை உள்ளத்தோடு ஔவையார் பேசி முடியாது அவரது உண்மைக் கவியுள்ளத்தை அப்படியே இன்னோசை பெற்றுவரும் செஞ்சொற்களால் சித்திரித்துக் காட்டுவதாகும். அன்பர்களுக்கு இக்கவி மலரை ஓர் கையுறையாக வழங்குகிறோம்.



# "MESSAGE OF GOODWILL"

## RAJAH SIR. ANNAMALAI CHETTIAR

NATANA VILAS VEPERY.
MADRAS.
*25th October 1930.*

*Dear Sirs,*

I am glad to hear that you intend starting a monthly journal, Under the Editorship of Mr. K. Ramanathan Chettiar *B.A.,B.L.* It will, I hope, make for itself a respectable place among the progressive journals of the country. It is with pleasure that I look forward to its coming. It has my best wishes for a long career of usefulness.

# வாழ்த்துச் செய்திகள்.



ஜே. எஸ். கண்ணப்பர் அவர்கள், சென்னை,
திராவிடன், ஆசிரியர். 13—10—1930.

தங்கள் தலைமையின் கீழ் "தனவணிகன்" எனப் பெயரிய மாத இதழ் ஒன்று வெளிவருதல் அறிந்து களிபேருவகை அடைகின்றோம். இவ்விதழின் நோக்கம் சமுதாய சீர்திருத்தத்தைத் தழுவியிருப்பது போற்றத்தக்கது. இவ்விதழை நாம் மனமுவந்து வரவேற்கின்றோம்.

* * * *

திரு. ஜே. சுந்தரம், பி. ஏ., எல். டி., தேவகோட்டை,
ஹெட்மாஸ்டர், 18-11-30.
நகரத்தார் ஹைஸ்கூல்.

'தனவணிக'னுக்கு நல்வரவாகுக! 'தனவணிகன்' தனவணிகர் நாட்டில் கல்வியறிவின் நறுமணத்தை வீசுவான் என்று நம்புகிறேன். மலர்மகள் தாண்டவமாடும் இடத்தில் கலைமகளும் வசித்தாலன்றி நமது நாட்டிற்கு நன்மையேது?

ஸ்வாமி விவேகாநந்தர் கூறியவாறு செல்வமும் அறியாமையும் யௌவனமும் ஒன்று சேர்ந்தால் அளவிலாத் தீமையை விளைவிக்குமல்லவா? ஆதலால் நமது 'தனவணிகன்' கல்வியறிவைப் பரவச் செய்வானாக!

'செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்' என்றபடி நமது நாட்டுச் செல்வத்தை நல்வழிப்படுத்தும் முறைகளைத் தனவணிகன் காட்டுவானாக!

நமது நாட்டில் செல்வச் செருக்கினால் ஏற்படும் டம்பத்தையும் தீமைகளையும் அஞ்சாமல் 'தனவணிகன்' எடுத்துரைப்பானாக!

தனத்தினால் மூடப்படும் ஞானக்கண்களைத் திறந்து போகத்திலும் ஈசனின் திருவடியை மறவாமல் இருக்க உண்மைப் பக்தியையும் 'தனவணிகன்' புகட்டுவானாக.

* * * *

திரு. சாண்டோ, கீழச்சிவற்பட்டி,
லே. சோமசுந்திரன் அவர்கள். 20-7-30.

மிகவும் வந்தனம். உங்கள் விருப்பப்படி யான் செய்யச் சித்தமுடையேன். நான் தவறாமல் கட்டுரை தர இசைகின்றேன். அன்பர் ஆசிரியர் கே. இராமனாதன் அவர்களை நானறிவேன். அவர்கள் திறமைபற்றிக் கேள்வியுற்றிருக்கிறேன். 'தனவணிகன்' தனவணிகனாகவே நீடுவாழப் பிரார்த்திக்கிறேன்.

திரு. A. L. A. R. சோமநாதன் செட்டியாரவர்கள்,
*லக்ஷ்மி விலாஸ் பாலெஸ், தேவகோட்டை.*
25—11—1930.

---

*தங்கள் பத்திரிகை நமது நாட்டின் கல்வி, வியாபாரம் முதலியனவற்றை விருத்தி செய்யும் பொருட்டும், யுவர்கள் முதல் பெரியோர்கள் வரை அதனால் ஒரு பயன் அடையும் பொருட்டும் உழைப்பதற்காக வெளிவருவதுபற்றி சந்தோஷிக்கின்றேன். தங்கள் பத்திரிகைக்கு எல்லாம் வல்ல இறைவனை நீண்ட ஆயுளும் முன்னேற்றமும் உண்டாகுமாறு ஆசீர்வதிக்கப் பிரார்த்திக்கின்றேன்.*

---

Mr. K. V. A. L. Alagappa B.A., (Hon.) sends from London the following wireless message :--Wishing all prosperity for "*Dhanavanikan.*"

---

MR. T. A. V. NATHAN, B.A., B. L.
EDITOR., " JUSTICE "

*Madras,*
*23—10—30.*

I am glad to learn that you are starting a Tamil Monthly Journal to be devoted to literary and social activities. Such journals are highly necessary to bring home to the Tamil world, and particularly to its women folk, the greatness of 'Dravidan' literature and Dravidan culture. I hope and trust that in the realm of social reform your journal will play a very important part. I wish the "Dhanavanikan" a prosperous and useful career.

---

MR. V. RM. CHETTIAR. B. A.

*Saigon,*
*3rd Oct., 1930.*

I am most heartily willing to cooperate with you all in this literary enterprise, and offer my best suggestions, whenever necessary towards the journal's progressive career.

---

# திரு. A. M. S. ராகவன் B. A., L. T.,

ஹெட்மாஸ்டர்,

ஏ. வி. எச். ஸ்கூல், பள்ளத்தூர்.

---

, செட்டிமார் நாட்டுக்கு நல்ல தேசிய முறையில் நடத்தப் பெறும் ஓர் பத்திரிகை மிகவும் தேவை யென்று நான் பல முறை நினைத்ததுண்டு. ஆனால் அத் தேவை தங்களுடைய மதிப்பு வாய்ந்த பத்திரிகையினால் பூர்த்திசெய்யப்பட்டு விட்டதென்பதை யறிய மிகவும் சந்தோஷ மடைகின்றேன்.

இப்பத்திரிகை இது தோன்றிய இடமாகிய செட்டிமார் நாட்டில் அறிவு வளர்ச்சி முதலிய ஆக்க வேலைகள் செய்யவேண்டும். இதன் முதலிதழில் வெளிவருகின்ற உயர்தர கட்டுரைகளைக் கொண்டு இப்பத்திரிகை அறிவு வளர்ச்சிக்கான துறையில் உழைக்கின்றதென்பதை யாவரும் நன்குணரலாம்.

கோட்டையூர் "தனவணிகன்" தோன்றிய நாட்டுக்கு மட்டுமல்ல! ஆனால் இத்தேசத்துக்கே தன்னலமற்றதும் முன்னேற்ற முள்ளதுமான தொண்டு செய்து நீடூழி வாழ விரும்புகின்றேன்.

குறிப்பு :—இன்னும் திருவாளர்களான. S. L. S. செட்டியப்ப செட்டியார், J. P., டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி, ரெவரண்ட் H. A. பாப்லி முதலியவர்களும் மற்றும் பலரும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியுள்ளார்கள். (நி--ஆ.)



# " கீதையின் போதனை "

By
(MALABARI.)

இந்தியாவிலுள்ள ஆரியர்களும் அவர்களை பின் பற்றுபவருமான சிலரும் நான்கு வேதங்களேயுமே தமது முக்கிய மத நூலாகக்கொண்டுள்ளனர். நான்கு வேதங்களை முக்கிய நூலாகக் கொண்டுள்ள இம்மக்கள் அவ் வேதங்களை கற்று அவைகளின் பொருள்களை உணரக்கூடவில்லை. ஏனெனின் வேதங்கட்கு பல திறப்பட்ட கொள்கைகளைக்கொண்ட பலர் பல பாஷியங்களை விரிவாக வரைந்திருப்பதும் அம்மொழி நடை முறையில் இல்லாமையாலும் அவைகளை கற்பதற்கு போதிய காலமும் வசதியும் இல்லாமையுமே யாகும்.

வேதத்தின் சாரம் தான் உபநிடதங்கள் எனச் சொல்லப்படுகின்றன. மேற்கண்ட காரணங்களால் அவைகளை கற்பதற்கும் இயலவில்லை. உபநிடதங்களின் சாரம் கீதை என்று பல அறிஞர்களால் சொல்லப்படுகின்றமையால் இப்பகுதியினர் பகவத் கீதையை முக்கிய நூலெனக் கருதுகின்றனர். இவர்களில் கீதையை படித்து அதன் பொருளுணர்ந்து அவைகளை பின் பற்றுபவர் ஒரு சிலரே யாகும்.

எல்லா சமூகங்களின் முன்னேற்றத்தையும் சமரசத்தையும் நடு நிலைமையுடன் விளக்கிக்காட்டுவதே கீதையின் பரந்தநோக்கமாகும். கீதையின் உயரிய கொள்கைகளை நடுநிலைமையுடன் ஆராய்ந்துணரும் ஒரு சிலரே அறிவர். சுருங்கக் கூறுமிடத்து பகவத்கீதை ஜனசமூகத்தின் அஸ்திவாரமாகும். நமது மதத்தின் உன்னத இலட்சியங்களை உலகமெங்கும் பரப்பிய உத்தமர் விவேகானந்தரும் " இந்தியாவில் பிறந்த ஒவ்வொருவரும் பகவத் கீதையை பயிலுதல் வேண்டும்" எனக்கூறிப் போந்தார்.

சில நூற்றுண்டுகளாக கீதையின் கொள்கைகளை பின் பற்றத்தவறிய இம்மக்கள் வைசிய குலத்தில் பிறந்தவரென்று சொல்லப்படும் " உலகம் போற்றும் உத்தம சீலராகிய காந்தியடிகளை போற்றுவது, அடிகள் கீதையை தமது வழிகாட்டியாகக்கொண்டு

எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணப் பெரியா ராய்த் திகழ்வதாலன்றி வேறில்லை. பிறப்பினுல் உயர்வு தாழ்வு இல்லையென்பதும் தொழிலினுலேயே மனிதன் உயர்வடைகின்ருன் என்பதும் "குணகர்மங்களினுல் நான்கு பிரிவுகள் உண்டாக்கப் பட்டது" என்ற கீதை வாக்கியத்தால் பெறப்படுகின்றது.

எனவே பிறப்பினுல் உயர்வு இல்லையென்பதும் கர்மத்தினு லேயே உயர்வு உண்டென்பதும் கொள்ளக்கிடக்கின்றது இதற்கு அடிகளே போதிய சான்ருக விளங்குவதும் அனுபவ வாயிலாக அறியக்கிடக்கின்றது.

ஆனதால் மக்கள் உயர்வடைவதற்கு குண கர்மங்களில் சிறப்புற்றிருத்தல் வேண்டும். குண கர்மங்களில் சிறப்புற்றிருத் தற்கு "ஆத்மீக அறிவு" இன்றியமையாதது.

அறிவு வளர்ச்சிக்கு கல்வியும், கல்விக்கு விடா முயற்சியும் வேண்டற்பாலது. போதிய கல்வி கற்று ஆத்மீக அறிவுபெற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணராய் விளங் குதல் மனிதப்பிறவியின் விழுமிய நோக்கமாகும் அங்ஙிலையுற்ருேன் எவ்வுயிரிடத்தும் வேற்றுமை பாராட்டாது எவ்வுயிரும் இறை வன் வடிவம் எனக்கொண்டு அன்பே உருவாய் திகழ்வன்,

வித்யாவினே சம்பன்னே பிராம்மணே கவி ஹஸ்திநி
சுநிசைவ ஸ்வபாகேச பண்டிதாஸ் சமதர்சிந :

என்ற கீதை சுலோகத்தின்படி எவ்வுயிரிடத்தும் சமதிருஷ்டி யுடன் வாழ்தல் மனித தன்மையாகும்.

